

ரவரி, 1994

# ஸப்தகிரி

விலை ரூ. 2/-




திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத



*வாழ்த்துகவாய் காண்ககண் கேட்கசெவி மகுடம்*
*தாழ்த்தி வணங்குமின்கள் தண்மலரால்-சூழ்த்த*
*துழாய்மன்னு நீண்முடியென் தொல்லைமால் தன்னை*
*வழாவண்கை கூப்பிமதித்து.*

(நான்முகன் திருவந்தாதி - 11)

*நிறைய அணிந்துகொண்ட திருத்துழாய் மாலை (துளசிமாலை) பொருந்தியிருக்கப்பெற்ற, நீண்ட திருவபிஷேகத்தை உடையவனும், என்னிடத்தில் நெடுநாளாக வியாமோஹமுடையவனுமான ஸர்வேஸ்வரனை ஒருநொடிப்பொழுதும் விடாமல் அழகிய கைகளைக் கூப்பி தியானம் பண்ணி தலையை வணங்கி, குளிர்ந்த மலர்களைக்கொண்டு வழிபடுங்கள். உங்களுடைய வாய் அவனைத் துதிக்கட்டும், காதுகள் அவனுடைய கதையையே கேட்கட்டும்.*



# ஸப்தகிரி

பிப்ரவரி - 1994


தனிப்பிரதி ரூ. 2 மலர் 24

வருடச்சந்தா ரூ. 24 இதழ் 9





பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முகப்பட்டை | : ஸ்ரீகாஞ்சி பரமாச்சார்யார். |
| பின்னட்டை | : ஸ்ரீபுரந்தர தாஸர். |
| முதல் உள்ளட்டை | : ஸ்ரீசுதர்ஸன மகாசாந்தி யக்ஞம் - பெங்களூர். |
| 2வது உள்ளட்டை | : ஸ்ரீகோவிந்தராஜசுவாமி திருக்கோயில் தெப்போத்ஸவம் - திருப்பதி. |

JAGADISH

# உங்களுடன்....



“மணமாகாத ஓர் இளைஞன் மரணத்தைத் தழுவிடும்போது அதனைக் கேட்டு ஊரே சோகத்தில் மூழ்கும். மணமாகிய இளைஞன் ஒருவன் இறந்தால், இறந்தவனின் இளம் மனைவியின் நிலையை மனதிற்கொண்டு ஊர் மரணத்தை ஏசும். சுமார் 40-45 வயதுக்காரர் இறந்தால், அவருடைய குடும்பத்தை எண்ணி, உறவும் தெருவும் சோகிக்கும். அறுபது வயது பெரியவர் ஒருவர் மரணத்தைத் தழுவினால், வீடும், சுற்றமும் துன்பத்தில் சிலநாள் மூழ்கும். எண்பது வயதினை தாண்டிய ஒருவர் இறந்தால், பேரப்பிள்ளைகளுடன் மகிழ்ந்து ஆண்டு அனுபவித்தே சென்றார் அல்லது நோயின் துன்பத்திலிருந்து விடுதலை பெற்றார் என்றே கூறி, அம்மரணத்தை வீடும், சுற்றமும் வெகுவாகப் பொருட்படுத்தாது. இது பொதுவான உலகத்தாரின் மன இயல்பு. அம்மரணம் நூறு வயது தாண்டிய ஒருவர்க்கு உரியதாக இருக்கும் போது, மக்களின் மன இயல்பு எவ்வாறு இருக்கும்? “நூறு வயது வாழ்ந்தாரா” என்ற ஆச்சர்யமே மிஞ்சி நின்று, அந்த ஆச்சர்யமும், நூற்றிருபது வயது ஒருவர் உள்ளார் எனும் செய்தியில், மறைந்து போகும்.

ஆனால் நபர் ஒருவர் தனது நூறுவது வயதில் மரணத்தை எதிர்கொண்ட போது, அவரது மரணமானது, “ஐயோ, இறந்துவிட்டாரா, நம் சந்ததி காண இன்னும்பல ஆண்டுகள் வாழ்ந்திடக்கூடாதா, அவருடைய ஒளிமுகத்தை இனி எங்கு, யாரிடம் காணப்போகிறோம். இனி நமக்கு கதி யார், இனி என்ன நடக்குமோ” என்ற அச்சமும், குழப்பமும், கேள்விக்குறியும் விளைவிக்கக் கூடிய ஓர் சூழ்நிலையை நம்மைச் சுற்றித் தோற்றுவித்துள்ளது. ஆம், காஞ்சி மாமுனி என்றும், நடமாடும் தெய்வம் என்றும் பலவாறு பல்லோராலும் பக்தியுடன் அழைக்கப்பெற்ற, சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகள் வரலாறு கொண்ட காஞ்சி காமகோடி பீடத்தின் 68ஆவது மடாதிபதியான ஸ்ரீசந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள் தனது நூறுவது வயதில் சித்தி அடைந்த செய்தியே, வாழ்க்கையின் பல்வேறு பிரிவினரையும், நிலையினரையும் சோகத்தில் ஆழ்த்தியுள்ளது.

மேடை ஏறாத அரசியல்வாதி; ஆர்ப்பாட்டம் இல்லாத சீர்த்திருத்தவாதி; ஆடம்பரம் இல்லாத சமயவாதி; எளிமையில் ஏழை ஜாதி; நாட்டு நலனை போற்றிய தேசியவாதி; சிறிதே பேசும் சிந்தனை வாதி; பாரே போற்றும் ஒற்றுமைவாதி; பழமையில் புதுமை கண்ட முற்போக்குவாதி; உள்ளத்தாலும்; உடலாலும் தூய்மைவாதி; கொண்டகொள்கையால் தீவிரவாதி என்று அவர்தம் சிறப்பினை இன்னும் அடுக்கிக்கொண்டே போகலாம். சொற்களுக்குத்தான் பஞ்சம்.

காஞ்சிமாமுனிவரின் மறைவினால் நமது சனாதன தர்மத்தின் பெருந்தூண் ஒன்று சரிந்துவிட்டது என்றே கூறலாம். கீதையைப் புரிந்துகொள்ள எந்தவித உரைநூல்களும் தேவையில்லை. அக்கண்ணனின் கீதைக்கு இம்மண்ணில் ஒருவிளக்கமாக பரமாச்சார்யார் அவர்கள் விளங்கினார். அவர் வாழ்ந்து காட்டிய வாழ்க்கையை, கூறிப்போந்த அருளுரைகளை நாம் நம் வாழ்நாளில் ஒருசிறிதேனும் கடைப்பிடித்தாலே போதுமானது. அரசன் முதல் ஆண்டி வரை பல்வேறு வாழ்க்கை நிலைகள் மற்றும் துறைகளைச் சார்ந்தோர், தென்னகத்திற்கு வருகை புரிந்தபோதெல்லாம், ஏன் தங்களை இக்கட்டான பிரச்சனைகள் சூழ்ந்த

போதெல்லாம், 'ஏழுமலையான்' கோவிலுக்கு வருகை புரிவது போன்றே காஞ்சிமாநகர் வந்து 'பெரியவாளின்' தரிசனம் பெற்று, அவர் அருட்பார்வையாலேயே அமைதி பெற்று, மனத் திருப்பம் பெற்றுச்சென்றது அனுபவித்தார்க்கே புரியும்.

அதிகமாகப் பேசார். பேசினால் பேச்சில் எளிமை. அவ்வெளிமையில் தத்துவ சிந்தனை. அச்சிந்தனையில் தனிமனித மேம்பாட்டு எண்ணங்கள். அவ்வெண்ணங்களிலே மனித நேய - தேசிய வளர்ச்சிக்கான பரந்த பண்புக்கூறுகள். இவையெல்லாம் அம்மகான் ஒருவரிடமே குடிகொண்டு இருந்தன. அதனால்தான் அன்னாரை நடமாடும் தெய்வமாக இக்குவலயம் கொண்டாடி மகிழ்ந்தது.

பன்மொழி அறிஞராக விளங்கி, வேதாந்த வித்தகராகத் திகழ்ந்து, இந்தியக் கலாசாரத்தூணாக நின்று, ஏழையின் நேசராக வாழ்ந்து, எல்லாச்சமயத்தாரும் போற்றிடும் உத்தமராக பிரகாசித்துத் தனது வாழ்க்கையை ஒரு புனித வேள்வியாக மேற்கொண்டார். அதனால்தான் அவர் இனம், இடம், மொழி, நிறம், சமயம் கடந்த ஓர் ஒப்பற்ற இவ்இருபதாம் நூற்றுண்டின் சிறந்த ஆன்மீகக் காவலராகப் போற்றி வணங்கப்பட்டார். புத்தன் பிறந்த மண்ணில், புத்தன் பிறந்த திருநாளில் உதித்த அம்மகான், மக்கள் உய்ய, சமயத்தை மக்களிடம் கொண்டு சென்ற புதுமைச் சமயவாதி அவர்.



இதுகாறும் கூறியவை யாவும் அவர்தம் பெருமைகூறும் புகழஞ்சலிகளே என்பதில் சிறிதும் ஐயமில்லை. வெறும் புகழஞ்சலிகள் செலுத்தினால் மட்டும் நம் கடமை, பொறுப்பு முடிந்துவிடுமா என்ன? அவர்தம் வாழ்க்கை நெறிமுறையினால் நாம் கற்றது என்ன? நம் தலைமுறையினர்க்கு நாம் சொல்வது என்ன? அதனை ஒரு சிறிதளவாவது சிந்தித்தால்தான், "அவர் வாழ்ந்த காலத்தில்தான், மண்ணில்தான் நாம் வாழ்ந்தோம்" என்று கூறிக்கொள்வதில் பொருள் இருக்கும்; பெருமை இருக்கும்.

எளிமையான வாழ்க்கை, மிதமான உணவுப் பழக்கங்கள், உடல், உள்ளக் கட்டுப்பாடுகள், குறைவான பேச்சு, நிறைவான சிந்தனை, ஒருமைப்பாட்டு உணர்வு போன்றவையே நாத்திகர்களையும் அவரைப் போற்றச் செய்தன. மற்றைய சமய நெறிகளில் ஈடுபாடு, பிற சமயக் கருத்துக்களுக்கு மதிப்பளித்துத் தன் சமயத்தை வளர்த்திட அவர் கொண்ட முயற்சிகள் போன்றவையே மற்றைய சமயத்தாரையும் அவரை வணங்கிடச் செய்தன.

இந்து சமயத்தார்க்கு அவர் விட்டுச்சென்ற செய்திகள்தாம் என்ன? மனித நேய மேம்பாடு, சோம்பலில்லாத வாழ்க்கை, ஒற்றுமை உணர்வு, பகட்டில்லாத சமய வழிபாடு, பக்தியுடன் - கடமை உணர்வுடன் - முயற்சியுடன் கூடிய நேர்மையான உழைப்பு, இந்தியக் கலாச்சாரப்பற்று, வேதங்களின் பற்றிய அறிவு, சமயச் சான்றோர்கள் பால் பக்தியும் பணிவும் போன்றவையே நாம் அவரிடமிருந்து பின்பற்றக்கூடிய அரும் பண்புகளாம்.

மனிதனாகவும், இந்தியனாகவும், இந்துவாகவும் விளங்க வேண்டியதன் அவசியத்தை அவர்தம் புனித வாழ்க்கை சுட்டிக்காட்டியுள்ளது. அதை நாம் உணர்ந்தோமேயானால், அதுவே நம்மையும் நம் சந்ததியினரையும் தலைநிமிர்ந்து வாழ வழிவகுக்கும்.



# காஞ்சி மாமுனிவர்!

ராமதாசன்

## பேரொளி :

உலக மக்கள் அனைவருக்கும் ஞானத்தை வழங்கி, அருளும் ஆசியும் புரிந்து வந்த பேரொளி வான்நோக்கிச் சென்றது! ஆம்! 1994ஆம் ஆண்டு சனவரித்திங்கள் 8ஆம் நாள் பகல் 2.58க்குக் காஞ்சி மாமுனிவர் மகா சமாதி அடைந்தார்! அச்செய்தி கேட்டு அனைத்து மக்களும் காஞ்சித் திருமடம் நோக்கி விரைந்தனர்! மாமுனிவரின் திருஉடலை இறுதியாகத் தரிசித்துக் கண்ணீர் மல்கி வ..பட்டுக் கலங்கினர்.

## போற்றி அஞ்சலி :

நடமாடும் தெய்வம்! ஆன்மீகத் தலைவர்! மனித இன வழிகாட்டி! கலங்கரை விளக்கம்! எச்சமயத்தவரும் ஏற்றிப் போற்றும் பரம்பொருள்! தலைசிறந்த தத்துவ ஞானி! மாமுனிவர்! ஒளிவிளக்கு! பண்புக்கோர் எடுத்துக்காட்டு! ஆன்மீக வரலாற்றின் மிகப்பெரிய சகாப்தம்! பாமாலை! நிறைவாழ்வு! தவமுனிவர்! துறவுக்கும் அமைதிக்கும் தூயவடிவம் தந்த தெய்வம்! இறைவனின் மறு அவதாரம்! மாபெரும் சமூகச் சீர்திருத்த வாதி! இந்திய கலாசார ஒருமைப்பாட்டின் மறுபதிப்பு! புலமை மிக்கப்போதகர்!

இப்படிப்பட்ட எண்ணற்ற போற்றிகளுக்குரியவர் காஞ்சிப் பெரியவர் என்பதை உள்ளம் கசிந்துருகிப் பலதிறத்தாரும் பரவித் துதிபாடி நிற்கின்றனர்.



## அவதாரம் :

தென்னாற்காடு மாவட்டம் விழுப்புரம் விழுமிய தவம் செய்தது. சுப்பிரமணிய சாஸ்திரிகளும் மகாலட்சுமி அம்மையாரும் செய்த பெரும் புண்ணியத்தால் இரண்டாம் மகவாக ஞானப்பிழம்பு ஒன்று அவதரித்தது. அக்குழந்தைக்குச் சுவாமிநாதன் என்று பெற்றோர் பெயரிட்டனர். முருகப் பெருமானின் திருநாமங்களுள் ஒன்று சுவாமிநாதன் என்பது. பிரணவத்துக்குத் தந்தைக்கே பொருள் கூறிய பெருமானின் பெயர்பெற்ற ஞானக் குழந்தை, பிற்காலத்தில் உலகுக்கே ஞானத்தை வழங்கிய மாமுனிவராகத் திகழ்ந்தது.

## இளமையும் கல்வியும் :

பால பருவத்தில் சுவாமிநாதன் பள்ளி செல்லவில்லை. தந்தையிடமே கல்வியும் சங்கீதமும் பயின்றார். பக்திப்பாடல்களையும், புராணங்களையும் தாயிடமிருந்து கற்றார். கற்றவற்றை அப்படியே மனப்பாடம் செய்து கொண்டார்.

பின்னர் சிதம்பரத்தில் பால பாடம் பயின்றார். திண்டிவனத்தில் இருந்த அமெரிக்

கல் [illegible] உயர்நிலைப்பள் ளிக்கூடத்தில் [illegible] வகுப்பில் [illegible] படித்தார். திறமையு டன் கற்றதால் அவ்வகுப்பில் இவர்தாம் அதிக மதிப்பெண்க ளைப்பெறும் முதல் மாணவ ராக விளங்கினார். எனவே, பரிசுகள் பல இவருக்குக் கிடைத் தன.

இதே பள்ளியில பைபிளை ஒப்புவிக்கும் போட்டியில் இவ ருக்கே முதற்பரிசு கிடைத் தது. இளமையில் பெற்ற இந்தப் புலமையின் விளைவு தான் பிற்காலத்தில் இவர் ஆசி பெற்ற போப்பாண்டவரும் சுவாமிகளின் பைபிள் விளக் கம் கேட்டு வியப்பெய்தி நிற்கக் காரணமாயிற்று.

நகைச்சுவையுடன் பேசுவதில் வல்லவராகவும் விளங்கினார். நடிப்பிலும் அப்படியே! வாழ்க் கையில் ஒருமுறை மட்டுமே நடித்த சுவாமிநாதன் ஏற்றுச் சிறப்பித்த வேடம் 'ஆர்தர் இளவரசன்' என்பது! 1906ஆம் ஆண்டு 9ஆம் வகுப்பு பயிலும் போது ஷேக்ஸ்பியரின் 'ஜான் மன்னன்' நாடகத்தில் நடித்த நடிப்பைப் பாராட்டி இவருக்கு முதல் பரிசும் வழங்கப்பட்டது. இவரின் கல்வித்திறம் கண்டு கல்வி அதிகாரிகளும் பாராட் டினர்.

### வியக்கத்தக்க அறிவு :

1906ஆம் ஆண்டு, திண்டி வனம் அருகே பெருமுக்கல் என் றொரு கிராமம். அப்போது காஞ்சி மடத்தின் 66வது பட் டமாக விளங்கிய ஸ்ரீசந்திரசேக ரேந்திர சுவாமிகள் அக்கிராமத் தில் முகாமிட்டிருந்தார். சுவா மிகளைச் சுவாமிநாதன் பெற் றோருடன் சென்று வணங் கினார். சுவாமிநாதனைச் சோதிக்க மடாதிபதி வினாக்கள் சிலவற்றை விடுத்தார். மடாதிப தியின் வினாக்களுக்கு மதிநுட் பத்துடன சுவாமிநாதன் விடை பகர்ந்தார். அறிவுபூர்வமாக விடையளித்த சுவாமிநாதனின் திறம் கண்டு வியப்படைந்தார்.

### மடாதிபதி அழைக்கிறார் :

மடாதிபதி காஞ்சி திருமடத் துக்கு எழுந்தருளினார். அவர் நெஞ்சில் சுவாமிநாதன் நீங்கா இடம் பெற்றிருந்தார். எனவே, 1907ஆம் ஆண்டு பிப்ரவரி முதல் வாரத்தில் மடாதிபதி யின முகாமில் இருந்து சுவா மிநாதனுக்கு அழைப்பு வந்தது. சுவாமிநாதன் தன் தாயாருடன் காஞ்சி திருமடத்துக்குச் சென் றார். அப்போது மடாதிபதி காஞ்சியிலிருந்தும் புறப்பட்டுக் கலவையில் முகாமிட்டிருந்தார்.

எனவே, கலைவை நோக்கிச் சுவாமிநாதன் புறப்பட்டுச் செல் லலானார். இவர் சென்று சேரு வதற்குள் பெரியம்மை நோய் பீடிக்கப்பட்டதால் மடாதிபதி சித்தி அடைந்துவிட்டார்.

### மடாதிபதியானார் :

66ஆம் மடாதிபதி சுவாமிநா தனை மடாதிபதியாக்க எண்ணி யிருந்தார். 67ஆம் மடாதிபதி யாகச் சுவாமிநாதனை நியமிக் கும் முன்பே மடாதிபதி சித்தி அடையும் நேரம் நெருங்கிய தால், இலட்சுமி காந்தன் என்ற சீடருக்கு உபதேசம் செய்து அவ ரையே 67 வது மடாதிபதியாக் கினார். இவர் எட்டுநாள் கள் மட்டுமே மடாதிபதியாக இருந்து 1 3-2-1907ல் சித்திய டைந்தார்.

ஆனால், இவர் சித்தியடை யும்முன்னர் 13வயது நிரம் பிய சுவாமிநாதனுக்கு உப தேசம் செய்து 68வது மடாதி பதியாக்கி மகிழ்ந்தார்.

68ஆம் பட்டம் பெற்ற சுவா மிநாதன் காஞ்சி மடாதிபதி ஆனார்.

### ஜகத்குரு :

தமது பரம குருவாக விளங் கிய 66வது பீடாதிபதியின் நினைவைப் போற்றும் வண் ணம் ஸ்ரீசநதிர சேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் என்னும் தீட்சாநாமத்தைச் சுவாமிநா தன் நன்றியுணர்வுடன் ஏற்றார். 13 வயதில் துறவுக் கோலம் பூண்ட சுவாமிகள் கடுந்த வம் செய்தார். பூஜை, தியா னம் ஆகியவற்றை முறைப்படிச் செய்து வந்தார்.

பட்டமேற்ற பின்னர் சுவாமி கள் முதன் முதலாகக் கலந்து கொண்டது திருவானைக்கா கோவிலில் நடைபெற்ற கும்பா பிஷேக நிகழ்ச்சியேயாகும். பின் னர், கிராமம் கிராமமாகச் சுற் றுப் பயணம் செய்யத்தொடங் கினார்.

1907ல் காஞ்சி மடத்தின் நிர் வாகம் கும்பகோணத்துக்கு மாற் றப்பட்டது. எனவே, சுவாமிகள் கும்பகோணம் எழுந்தருளினார். அங்குச் சுவாமிகளுக்குப் பட் டாபிஷேக விழா மூன்றுநாட் கள் சிறப்பாக நடைபெற்றது. உலகத்தார் போற்றி வணங்கும் 'ஜகத்குரு' என்னும் தெய்வீகப் பட்டம் சுவாமிக்கு வழங்கப்பட் டது. சுவாமிகள சிம்மாசனத் தில் அமர்ந்தார்; தம்மைத் தரி சித்த பக்தர்களுக்கெல்லாம் ஆசி வழங்கினார்; பின்னர் யானை மீது அமர்ந்து பவனி வந்தார்.

கும்பகோணம் மடத்திலிருந்து கொண்டு தரிசனம் கொடுத்து வந்த சுவாமிகள் 1909 ல் காஞ் சிக்கு எழுந்தருளினார்.

## புலமைப் பெருக்கு :

சுவாமிகள் 1909-1910 ஆண்டுகளில் வடமொழி இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தார். வேதங்களிலும் பயிற்சி பெற்று வந்தார். 1911 முதல் 1913 வரை முசிறிக்கு அருகில் உள்ள மகேந்திர மங்கலத்தில் சாஸ்திரக் கல்வியைப் பயிலத் தொடங்கித் தேர்ச்சி பெற்றார்.

வியாகரணம், வேதாந்தம், தர்க்கம், மீமாம்சை, சங்கீதம் முதாலான பல கலைகளையும் கற்றுத் தேர்ந்தார்.

தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம், பிரெஞ்சு, மராத்தி, இந்தி முதலான பதினெட்டு மொழிகளில் புலமை பெற்றார்.

கர்நாடக சங்கீதம் பற்றிய பூரண ஞானம் இவருக்கு உண்டு. புகைப்படம் எடுப்பதிலும் வல்லவராக விளங்கி வந்தார்.

கணிதம், சோதிடம், வான சாஸ்திரம் போன்ற பல்வேறு துறைகளிலும் ஞானம் நிரம்பப்பெற்றார்.

தமிழில் உள்ள பக்திநூல்களான தேவாரம், திருவாசகம், பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், திருவாய்மொழி போன்றவற்றிலும், சிறந்த தேர்ச்சி சுவாமிகளுக்கு இருந்தது.

திருக்குறள் போன்ற அறநூல்களில் தமக்கிருந்த ஞானத்தை அவ்வப்போது வெளிப்படுத்தி வந்தார்.

தமிழ் இலக்கண நூல்களைப் புலவர்களும் பிரமிக்கும் வகையில் கற்றுத்தெளிந்திருந்தார்.

இவ்வாறு சுவாமிகளின் புலமைப் பெருக்கு பரந்து, விரிந்து, ஆழ்ந்து, தெளிந்து காணப்பட்டது.

## மடத்தின் நிர்வாகம் :

1915ஆம் ஆண்டு மேமாதம் சங்கர ஜயந்தி நாள்முதல் மடத்தின் நிர்வாகத்தைச் சுவாமிகள் ஏற்றுநடத்தினார். 'ஆரிய தருமம்' என்னும் பெயரில் மாத இதழும் வெளியிட்டார். மடத்தின் வரலாற்றைப் பலமொழிகளில் வெளியிட்டார். தாமிர பட்டயங்களிலும் அவ்வரலாற்றைப் பதிப்பித்தார். காஞ்சிமடத்தின் நிர்வாகத்தைச் சுவாமிகள் ஒழுங்குபடுத்தி நல்ல நடைமுறைக்கு கொண்டு வந்தார்.

## தொண்டுகள் :

ஏழைகளுக்காகப் 'பிடியரிசித் திட்டம்' கொண்டு வந்தார். பள்ளி கல்லூரிகளில் பயிலும் மாணவ மாணவியர்க்குப் பல்வேறு போட்டிகள் நடத்திப் பரிசுகளும் வழங்கினார். இலவச ஆயுர்வேத மருந்துவ மனையை நிறுவி நோயாளிகளுக்கு உதவிகள் செய்தார். வரதட்சணை கொடுப்பதையும், வாங்குவதையும் கடுமையாக எதிர்த்தார்.

சமயத்தொண்டு புரிந்ததைப் போலவே சமுதாயத் தொண்டுகளும் ஆற்றி வந்த பெரியவரை உலகமே போற்றி வழிபடத்தொடங்கியது.

## நாட்டுப் பற்று :

சமயப்பெரியாராகவும், சமுதாயத்தொண்டு புரிபவராகவும் உயர்ந்து விளங்கிய சுவாமிகளின் நாட்டுப்பற்று மறக்கமுடியாத ஒன்று. அந்நியப்பொருட்களை வெறுத்தொதுக்கும் நிலை நாட்டில் ஏற்பட்டபோது, சுவாமிகள் 1918ல் ராமேஸ்வரத்தில் முகாமிட்டிருந்தார். தன்னுடைய நாட்டுப்பற்றை நிலைநாட்டும் வகையில் சுவாமிகள் கதராலான காவியுடையையே அப்பொழுது முதல் இறுதி வரையும் அணிந்து வந்தார்.

பாலக்காடு அருகே நல்லிச்சேரி என்ற இடத்தில் சுவாமிகள் முகாமிட்டிருந்தார். தென்னாட்டில் அப்போது சுற்றுப் பயணம் செய்து கொண்டிருந்த காந்தியடிகள் சுவாமிகளைக் கண்டு உரையாடிய அந்த நிகழ்ச்சி உலகத்துக்கே பேரின்பம் அளித்தது. 1927ல் மகாத்மாக்கள் இருவரும் ஒன்று சேர்ந்திருந்த காட்சியைக் கண்டவர்கள் பாக்கியவான்கள்!

வினோபா, ராஜாஜி, சுப்பிரமணியசிவா, பாபுராசேந்திரபிரசாத், சித்தரஞ்சன்தாஸ், சத்தியமூர்த்தி, அரிசனத்தலைவர் M.C. ராசா, V.S. சீனிவாச சாஸ்திரிகள், சர். சி.வி. இராமசாமி ஐயர், பாஷ்யம் ஐயங்கார், ஈ.வே. ராமசாமி நாயக்கர் முதலான தலைவர்களைச் சந்தித்து நாட்டு விடுதலை பற்றி உரையாடியதும், நாட்டுநலம் குறித்துச் சுவாமிகள் அக்கரை காட்டியதும் சுவாமிகளின் நாட்டுப் பற்றுக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாம்.

## மன்னர்களும் வணங்கிய மாமுனிவர் :

சுவாமிகளின் தவ ஆற்றலைக் காணவும், நல்லாசி பெறவும் மன்னர் முதல் தொண்டர் வரை வந்து தரிசித்த வண்ணம் இருந்தனர்.

நேபாள மன்னர் மகேந்திரா, ராணி ரத்னாதேவி, இளவரசர் விக்கிரமசகாதேவ் ஆகியோர் 1965ல் சுவாமிகளின் திருவடி மீது தங்கள் முடிகள் பதியுமாறு வணங்கி ஆசி பெற்

றனர். 3-12-1966ல் ஸ்ரீ[illegible] [illegible] பிரேடரிகா சுவாமிகளின் திருவடிகளில் விழுந்து வணங்கி நல்லாசி பெற்றார்.

நம் நாட்டின் குடியரசுத் தலைவர்கள், பிரதம மந்திரிகள்; கவர்னர்கள், முதலமைச்சர்கள் முதலான உயர்மட்ட அலுவலர்கள் சுவாமிகளின் ஆசியைப் பெறக் காத்துத் தவம் செய்தனர்.

டாக்டர் உ.வே. சாமிநாதஐயர், பண்டிதமணி மு. கதிரேசஞ் செட்டியார், வாரியார் சுவாமிகள் போன்ற தமிழறிஞர்களைப் பாராட்டி விருதும் அளித்துச் சிறப்பும் செய்துள்ளார்.

கலைஞர்களும், அறிஞர்களும், பன்னாட்டுச் சமயத் தலைவர்களும் சுவாமிகளைத் தரிசித்து ஆசியும் ஆதரவும் பெற்றதை அறிஞர் உலகம் இன்றளவும் போற்றிப் பரவி வருகிறது.

### கருணைக் கடல் :

சுவாமிகள் ஏழைகள் பால் பெரிதும் இரக்கம் காட்டி வந்தார். 1924ல் காவிரியாற்று வெள்ளப்பெருக்கால் பாதிக்கப் பட்ட ஏழை அரிசனங்களுக்குப் பெரிதும் உதவி செய்தார். ஏழைச் சிறுவர்களைக் கண்டு விட்டால்போதும்! அவர்களுக்குப் பழம், உடை, உணவு என்று பரிந்து உதவி செய்வார்!

இவரைத் தரிசித்து ஆசியும், அருளும், பொருளும் பெற்றவர்கள் பட்டியலில் நரிக்குறவரும் அடங்குவர்.

### மூர்த்தம், தீர்த்தம், தலம் :

சுவாமிகள் கால்நடையாகவே யாத்திரையை மேற்கொள்வார். பரிவாரங்கள் புடைசூழ்ந்து வரும். சுவாமிகள் சாதாரணமாக நடந்து செல்வார். ஆனால், அவரைப் பின்பற்றிச் செல்வோர் ஓட்டமும் நடையுமாகத்தான் செல்லவேண்டும்.

காவி உடை, தலையிலும், கழுத்திலும், நெற்றியிலும் ருத்ராட்ச மாலைகள், சிவந்த பொன்னிற மேனி, ஒளிவீசும் கண்கள், தோளில் துலங்கும் ஏக தண்டம், நீறுபூசிய திருமேனி, இறைவனின் திவ்ய மங்கள விக்ரமாகவே சுவாமிகள் காட்சி அளிப்பார். இறைவனின் மூரத்தத்தைக் கண்டு தரிசித்த பேரின்பத்தைப் பக்தர்கள் பெற்று ஆனந்திப்பர்.

நீர்நிலைகளைக் கண்டால் சுவாமிகள் நீரில் இறங்கி ஜபமும் தவமும் செய்யத் தொடங்குவார். இக்காட்சியை எவரும் எளிதில் கண்டு இன்புற்றனர்.

சுவாமிகள் யாத்திரையை மேற்கொள்ளும் போது எந்த இடமாயினும் அங்கேயே முகாமிடுவார். படுக்கும் போதும், ஓய்வு கொள்ளும்போதும் பாங்கான இடத்தைத்தான் தேர்ந்தெடுப்பார் என்பதில்லை; கரடுமுரடான தரையிலும் அப்படியே படுத்து நித்திரை கொள்ளும் காட்சியைக் காண்பவர்கள் 'இவர் சித்தரோ' என்று மெய் சிலிர்ப்பர்! சுவாமிகள் தங்கிய அந்த இடங்கள் புனிதத்தலங்களாகி விடும்.!

### வழிபாடு :

சுவாமிகளைத் தரிசிப்பதே பரமேசுவரனைத் தரிசிப்பது போன்றிருக்கும். ஸ்ரீசந்திரமௌளீசுவரருக்குச் சுவாமிகள் பூசை செய்வது வழக்கம். அவர் செய்து வந்த திரிகால பூசைகளையும். சிறப்பு நாள் பூசைகளையும் கண்டவர்கள் புண்ணியவான்கள்.

சுவாமிகள் விக்கிரகம் முன்பு அமர்ந்திருப்பார். பொன்னிற மேனி, காவி உடை, தோளில் சாத்திய ஏகதண்டம், நீறுபூசிய திருமேனி, கண்களை மூடி அமர்ந்த நிலை, தியானம், கண்களைத் திறத்தல், பத்திரங்கள, பூக்களை ஆற்றொழுக்கு போல் சமர்ப்பிக்கும் அழகிய காட்சி., கற்பூர ஆரத்தில். பூசை முதலிய தரிசனம! ஈசுவரனாகவே காட்சியளிக்கும் கோலம்!

இனியொரு முறை இக்காட்சியைக் காணவே முடியாது!

### பேரொளி :

மூன்று மணிநேரமே உறங்கி வந்த சுவாமிகள் எப்பொழுதும் செயல்பட்டுக் கொண்டே இருந்தார். சிறையில் உள்ளார்க்கும் அருளும் பொருளும் வழங்கி வந்த சிவமுனிவர்! தவம், ஜபம், தியானம், தரிசனம், அருளுரை என்று இப்படியே பயன் பட்ட வாழ்நாள்கள்! புத்தரும் சுவாமிகளும் ஒத்தவர்களே என்று எத்திறத்தாரும் போற்றிய ஏந்தல்! சைவ வைணவ சமய ஒற்றுமையை உறுதிப்படுத்தத் திருப்பாவை - திருவெம்பாவை - ஆறங்கமாநாடு கண்ட அண்ணல்! கனகாபிஷேகம் பல கண்ட கருணைக் கடல்! துறவிகளுக்கெல்லாம் துறவியாக விளங்கிய தூய்மையான மாமுனி!

அனுஷ நட்சத்திரத்தில் அவதரித்தார்! அதே நட்சத்திரத்தில் முத்தி பெற்றார்! அவதரித்ததும் ஞாயிறு! சமாதி ஆனதும் ஞாயிறு!

ஞானவடிவாக அவதரித்தார்! ஞான ஒளியை உலகுக்கீந்தார்! பேரொளியாக இன்று உலகெங்கும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார்.

சுவாமிகளின் தெய்வக்குரல் எங்கும் ஒலிக்கிறது. அவர் அருள்மொழி கேட்போம்! ஆன்ம நெறி தழைக்க உழைப்போம்! வாழ்க ஜகத்குரு. ✪

(தொடர் கட்டுரை)



# பகவத் கீதை

மூன்றும் அத்தியாயம்

## கர்ம யோகம்

உமைப்பிரியன்

கிம் கர்ம கிமகர்மேதி கவயோSப்யத்ர
மோஹிதா: ।
தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி
யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேSசுபாத்: ।।(16)

"கர்மம் எது அகர்மம் எது என்று அறிவதில் அறிவாளிகளே தடுமாற்றம் கொள்கின்றனர். எது கர்மம் என்று அறிந்து, தீயவற்றிலிருந்து விடுபடுவாயோ அதனை உனக்குக் கூறுவேன்."

[தீயவற்றில் மிகவும் மோசமானது பிறவி எனும் நோயாகும். விலக்கமுடியாத இந்தப் பிறவி எனும் நோயிலிருந்து விடுதலை அடைவதற்கு முன், வினைகளைப்பற்றி அறிதல் அவசியம். உடலால் செய்யப்படும் பயிற்சிதான் வினை என்று கருதக்கூடாது.]

கர்மணோ ஹ்யபி போத்தவ்யம்
போத்தவ்யம் ச விகர்மண: ।
அகர்மணஸ்ச போத்தவ்யம் கஹனா
கர்மணோ கதி: ।। (17)

"கர்மத்தின் இயல்பை தெரிந்து கொள்ள வேண்டும். தள்ளப்பட வேண்டிய கர்மம் (வினை) எது என்பதை அறிதல் அவசியம். கர்மத்தைக் கடந்த நிலையினையும் தெரிந்துகொள்ள வேண்டும். கர்மத்தின் இயல்பு அறிதல் எளிதல்ல"

[இவற்றையெல்லாம் செய்வா

யாகு என்று சாத்திரங்கள் கூறியிருப்பன யாவும் கர்மமாகும். (வினையாகும்) இவ்வாறெல்லாம் செய்யாதே என்று சாத்திரங்கள் கூறுவதெல்லாம் விகர்மமாகும். (வினையல்லாதது.)]

கர்மண்யகர்ம ய: பச்யேத கர்மணி
சகர்ம ய: ।
ஸ புத்திமான் மனுஷ்யேஷு ஸயுக்த:
க்ருத்ஸ்னகர்மக்ருத்: ।। (18)

"கர்மத்தில் அகர்மத்தையும் (வினையில் வினையல்லாததை) அகர்மத்தில் கர்மத்தையும் அறிபவன் மனிதர்களுள் பேரறிஞனாவான். அவனே சிறந்த யோகியுமாவான். அவனே எல்லாவற்றையும் செய்துமுடிக்க ஆற்றல் மிக்கவனாவான்."

[கர்மம், அகர்மம் எனும் சொற்களுக்குப் பல்வேறு தத்துவ அறிஞர்கள் பலவாறு விளக்கங்கள் தந்துள்ளனர். இவற்றை நன்கு அறிந்து செயல்படுபவன் சிறந்த யோகியும், அறிஞனும் ஆவான். இங்கு கர்மம் என்பது செயல்புரிவதும், அகர்மம் என்பது செயலற்று தோன்றுவதும் என்பது பொருளாகின்றது. தேரில் அமர்ந்துள்ள அரச்சுனன் தன் கையிலிருந்து வில்லையும், அம்பையும் பூமியில் நழுவவிட்டு, மனதில் குழப்பமும், அச்சமும் கொண்டு கவலையை முகத்தில் காட்டி விளங்குகின்றான். அதாவது போர்புரியும் கர்மத்தை விட்டு அகர்மத்தில் விளங்குகின்றான். ஆனால் அதே தருணத்து மனப்போராட்டம் ஒன்று அவனுள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றது. ஆம், மனத்தால், உணர்வால் அவன் வினை செய்து கொண்டிருக்கின்றான். அவன் நிலை அகர்மத்தில் கர்மம் ஆகிறது. அதே போன்று தேரோட்டியான கண்ணன் தேரில் இருந்துகொண்டு ஒரு கையால் குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்துக்கொண்டும் மற்றொரு கையில் சின்முத்திரை கொண்டும் விளங்குகின்றான். வெளியுலகில் ஒரு தேரோட்டி செய்யவேண்டிய கர்மாவை செய்துகொண்டிருந்தாலும், மனத்தளவில் போர் பற்றிய விளைவுகளை சிறிதும் எதிர்பார்க்காமல் சஞ்சலமற்று விளங்கினான் பகவான். இது கர்மாவில் அகர்மாவாகிறது.]

யஸ்ய ஸர்வே ஸமாரம்பா:
காமஸங்கல்பவர்ஜிதா: ।
ஞானாக்னிதக்தகர்மாணம் தமாஹு:
பண்டிதம் புதா: ।। (19)

"யாருடைய வினைகள் யாவும் ஆசையற்று, சங்கல்பமற்று விளங்குகின்றதோ, யாருடைய வினைகள் ஞானம் எனும தீயினால் அழிக்கப்பட்டனவோ, அவனை அறிஞன் என்று ஞானிகள் கூறுகின்றனர்."

[பயன் எதிர்பார்த்து, ஒருவன் வினையாற்றும் போது, அவனையறியாமலேயே அவன் அவ்வினைகளுக்குக் கட்டுப்பட்டவனாகின்றான். அதாவது வினையினால் ஏற்படும் இன்ப துன்ப விளைவுகளுக்கு அவன் உட்படுகிறான். ஒரு வினையை மேற்கொள்ளும்போது எதிர்பார்த்த பயன் அவன் அடையாத போது, தொடர்ந்து வினையாற்றுகின்றான். அதற்குமாறாக நாம் வெறும் கருவி மாத்திரமே, நம்மை இயக்குபவன், அவ்இறைவனே எனும் எண்ணத்துடன் அவன் செயல்படும் போது, அவன் தாம் செய்யும் வினையால் எள்ளளவும், என்றும் கட்டுப்படமாட்டான்.]

த்யக்த்வா கர்மபலாஸங்கம்
நித்யத்ருப்தோ நிராச்ரய: ।
கர்மண்யபிப்ரவ்ருத்தோऽபி நைவ
கிஞ்சித்கரோதிஸ: ।। (20)

"வினைப்பயன்களில் சிறிதும் பற்றற்று, என்றும் எதிலும் திருப்தி கொண்டும், எதனையும் சார்ந்து இல்லாதும் இருப்பவன் வினை ஆற்றினாலும், அவன் வினை ஆற்றாதவனாகவே கருதப்படுவான்."

[நாளும் தபால்காரர் ஒருவர் நூற்றுக்கணக்கான தபால்களை பட்டுவாடா செய்கின்றார். அத்தபால்களில் (கடிதங்களில்) பல்வேறு விஷயங்களில் இருக்கும் திருமணம், மரணம், எதிர்பார்ப்பு போன்ற இன்பமும் துன்பமும் விளைவிக்கும் செய்திகள் அடங்கியிருக்கும். இந்த உணர்வுகளை அக்கடிதங்களை பெறுபவர்கள் மட்டுமே அடையவர். ஆனால் இந்த உணர்வுகளைத் தாங்கி நிற்கும் கடிதங்களை விநியோகிக்கும் தபால்காரரை இந்த உணர்வுகள் தாக்காது. இந்த நிலையில் அவர் வினை ஆற்றிக்கொண்டிருந்தாலும், அவ்வினையினால் சற்றும் பாதிக்காது பற்றற்று விளங்குவார். இவ்வகையில் விளைவுகளை எதிர்பார்த்தோ அல்லது அவற்றால் தாக்குண்டோ அமையாது ஒருவன் தன் கர்மாவை (வினையை) செய்வானாயின் அவன் ஒரு யோகியாக கருதப்படுவான். கர்மத்தில் அகர்மா எனும் நிலையை அவன் கொண்டிருப்பதால் ஆசையற்று விளங்கும் அவன் எதற்கும், எங்கும், எவர்க்கும் அஞ்சத்தேவையில்லை.

நிராசீர்யதசித்தாத்மா
த்யக்தஸர்வபரிக்ரஹ:
சாரீரம் கேவலம் கர்ம

குர்வன்னாப்னோதி
கில்பிஷம் ।।(21)

'ஆசையில்லாதவன், உள்ளத்தையும் உடலையும் அடக்கியவன், தன் உடைமைகளைத் துறந்தவன், உடலளவில் மட்டுமே வினையாற்றுபவன் பாவம் செய்வதில்லை."

[ஆன்மீக வளர்ச்சிக்கு இடையூறு விளைவிக்கும் பந்த பாசங்களை உருவாக்கும் வினைகள் பாவும் பாவம் என்றே கருதப்படுகின்றன. மனதிலிருந்து ஆசை என்பதை அழித்துவிட்டால், பாவம் செய்ய வாய்ப்பில்லை. அப்போதுதான் அவன் ஒரு யோகி நிலைக்கு உயரமுடியும். ஆசை அழியும் போது மனிதன் உடலாலும், உள்ளத்தாலும், அறிவாலும் மேம்படுகின்றான். இந்த உடம்பு உழைக்கத்தான் இருக்கிறது. மனிதன் தெய்வீக நிலையை அடையவே இறைவன் உயிருக்கு இந்த உடலைக் கொடுத்தான். உடல் புனிதமாக வைத்துக்கொண்டால ஆன்மா சுத்தமடைகிறது; ஒப்பற்றதாகிறது. அந்த உடலைக் கொண்டு உழைக்கும் போது நான் எனது என்ற தன்னல பற்றுக்களை விட்டு விட்டுவதே, ஒருவனை உண்மையான மனிதனாக உருவாக்க வழிவகுக்கிறது. இறை அவதாரங்களும் உத்தம புருஷர்களும் இதைத்தான் நமக்கு மறைமுகமாக வாழ்ந்து காட்டிக்கூறியுள்ளார்கள்.]

யத்ருச்சாலாப ஸந்துஷ்டோ
த்வந்த்வாதீதோ விமத்ஸர: ।
ஸம ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி
ந நிபத்யதே ।। (22)

"எதிர்பாராது கிடைப்பதில் மகிழ்ச்சி கொள்பவன், இரு நிலைகளைக் கடந்தவன், பொறாமை அற்று விளங்குபவன், வெற்றியிலும் தோல்வியிலும் ஒரே நிலையில் இருப்பவன் வினையாற்றினாலும் அவன் அவ்வினைகளுக்கு அடிமையாகமாட்டான்."

[தான் அடைவதெல்லாம், அடையப்போவதெல்லாம் தன் பெரும் முயற்சியால்தான் என்று நினைக்கும்வரை தான் செய்யும் வினைகளுக்கு அவன் அடிமையாக விளங்குகின்றான். இது அறியாமையால் எழும் எண்ணமாகும். தன் ஆசைகளை நிறைவேற்றத் துடிக்கும் வரை அவன் மன உயர்வு பெறுவது என்பது சாத்யமாகாத ஒன்றாகும். தன் தேவைகளை அந்த இறைவனே உடன் இருந்து அருள்வான் என்ற உறுதியான நம்பிக்கையே அவனது ஆன்ம உயர்வுக்கு வழிவகுக்கும். வெற்றி தோல்வி, இன்பம் துன்பம், உயர்வு தாழ்வு போன்ற எதிர்மாறான இருநிலைகளிலும் தன்னை இழக்காது, அவற்றைப் பொருட்படுத்தாது அவையாவும் இறைவன் தீர்ப்பே என்று எண்ணுபவனே சிறந்த சாதகன் என்று அழைக்கப்பெறுகிறான். அதேபோன்று மற்றவர்களது நிலைகளை தன் நிலையோடு ஒப்பிட்டுக்கொண்டு பொறாமை கொள்ளாது, கிடைப்பவையாவும் இறைவனது கருணையே என்று நினைப்பவன் குழப்பமோ, ஏமாற்றமோ அடைவதில்லை. அதேதருணத்து எல்லாம் இறைவன் தீர்ப்பே என்று நினைத்துக் கொண்டு தனக்கு இடப்படும் வினைகளுக்குரிய முயற்சிகளை மேற்கொள்ளாது வாளா (சும்மா) இருக்காது, தனக்குரிய வினைமுயற்சிகளை மேற்கொள்பவனே சிறந்த சாதகனாகின்றான். அத்தகு முயற்சிகளால் விளையும் பயன்களை அவன் பொருட்படுத்துவதில்லை. அத்தகைய அவனை வினைகளானது எந்த நிலையிலும் தங்களுக்கு அடிமை கொள்வதில்லை.]

கதஸங்கஸ்ய முக்தஸ்ய
ஞானாவஸ்திதசேதஸ:
யக்ஞாயாசரத: கர்ம
ஸமக்ரம் ப்ரவிலீயதே: ।। (23)

"பற்றற்று இருப்பவனாய், முக்தியடைந்தவனாய, ஞானமார்க்கத்தில் மனம் உறுதியாக இருப்பவனாய, (செய்யும்) வினையை ஒரு வேள்வியாகக் கருதுபவனாய் இருந்து செய்யும் வினையானது (அவனைத் தாக்காது) கரைந்து விடுகிறது."

[ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் கூறியது போன்று, கைகளில் எண்ணெய தடவிக்கொண்டு, பலாபழத்தினை அறுத்து உள்ளிருக்கும் சுளைகளை எடுக்கும்போது, பழத்தின் பிசின் கைகளில ஒட்டாது. அவ்வகையில் உள்ளத்திலிருந்து உலகாயுத பொருள்களின்மீது வைத்துள்ள ஆசை எனும் பற்றுகளை விட்டொழித்தபோது, நாம் செய்யும் வினைகளினால் ஏற்படும் விளைவுகள் நம்மை எந்த நிலையிலும தாக்காது.]

ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்மஹவிர்
ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்மணா ஹுதம்
ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம்
ப்ரஹ்ம கர்ம ஸமாதினா ।। (24)

"அர்ப்பணம் (கொடுக்கப்படுவது) செயவது பிரம்மம்; தீயில் இடப்படும் நெய் போன்ற பொருட்களும் பிரம்மம்; பிரம்

மமாகிய தீயில் பிரம்மத்தால் அர்ப்பிக்கப்படுகிறது. பிரம்மமாகிய வினையில் (செயலில்) மனதை ஒருமுகப்படுத்தியவனுக்கு பிரம்மமே கிடைக்கிறது."

[நாமதாம் வினையாற்றுகின்றோம் என்று 'நாம்' எனும் மமதை கொள்பவனிடம் வேறுபாடு உணர்வு உள்ளது. அதாவது வேள்வியாகிய வினையை நாமதாம் செய்கின்றோம், நாம் தான் அவ்வினைக்குத் தலைவன் என்றும் அந்த வேள்விக்குரியது தீ, அதில் இடப்படுவன நெய் போன்ற பொருட்கள், இந்த வேள்வி குறிப்பிட்ட அந்த தேவதைக்காக செய்யப்படுகிறது என்று வேற்றுமை காணுகின்றான். ஆனால் அதே சமயத்து தான செய்யும் வினையானது மேலான ஒரு ஞான வேள்வியாகும். அந்த வேள்வியை மேற்கொள்ளும் தானும், அவ்வேள்விக்காக ஏற்படுத்தப்படும் தீயும், அத்தீயில் இடப்படும் பொருட்களும், அவ்வேள்வியை ஏற்றுக்கொள்ளும் தேவதையும் ஆகிய அனைவரும் பிரம்ம சொரூபமே ஆவர். அதாவது நாளும செய்யும் நித்ய கர்மாவையே ஞான கர்மமாக ஒரு ஞானி கருதுகின்றான். இந்த ஞானகர்மாவை நடத்தும் அவ் ஞானி இறுதியில் அந்த பிரம்மத்தையே அடைகின்றான்.]

தைவமேவாபரே யக்ஞம் யோகின:
பர்யுபாஸதே ।
ப்ரஹ்மாக்னாவபரே யக்ஞம்
யக்ஞேனைவோபஜுஹ்வதி ॥ (25)

"சில ஞானிகள் தேவதைகளுக்கு வேள்விகள் செய்கின்றனர். மற்றும் சிலர் பிரம்மமாகிய தீயில் ஆன்மாவைக் கொண்டு ஆன்மாவையே ஆகுதி (ஹோமம்) செய்கின்றனர்."

[நதியானது கடலில் சங்கமாகும்போது, அது தன் தனித்தன்மையை இழந்துவிடுகிறது. அதே போன்று பல்வேறு உணர்வுகளைக் கொண்ட ஜீவாத்மாவானது எங்கும் எதிலும் நிறைந்துள்ள பரமாத்வாவுக்கு ஆகுதியாக்கப்படுகிறது. அங்கு ஜீவபேதம் மறைந்து பரபோதம் ஏற்படுகிறது. இதுவே ஞான வேள்வியாகக் கருதப்படுகிறது.]

(தொடரும்)



மதுராந்தகம் ஸ்ரீதேவி (ஸ்ரீராஜராஜேஸ்வரி)

# திருக்கோவிலில் ஆகம வழிபாட்டு முறை

திரு. டாக்டர் கருணசேகர் - திருத்துறைப்பூண்டி.

திருக்கோவில் அமைப்பு முதல் ஆலய சடங்குகள் வரை அனைத்தும் நிகழும் முறை பற்றி விளக்கமுறத் தெரிவிப்பன ஆகமங்கள். மக்கள்தம் போக்கிற்கேற்ப வழிபடாமலும், பூசை செய்வோர் அநுட்டானங்களைப் புரிவோர் முதலியோர் விருப்பத்திற்கேற்ப பூசை செய்யாமலும், ஒவ்வொருவருக்கும் உரிய தகுதிகளையும் விதிகளையும் ஆகமம் தெளிவுறுத்துகிறது. இவ்விதிகள் திருக்கோவில்களில் பின்பற்றப்படுவதாலதான் திருவிழாக்களும் வழிபாடுகளும் மரபுக்கெடாமல் ஒரு கட்டுக்குள் அமைந்து பொலிவுறுகின்றன. அவற்றின் புனிதத்தன்மை கெடாமல் பாதுகாக்கப்படுகின்றன. ஆகமங்கள் கோவிலின் சாத்திரமாக விளங்குகின்றன என்பது மெய்ம்மை.

## ஆகமம்-விளக்கம்

ஆகமங்கள் வேதங்களின் பிழிவாக அல்லது வேதங்களின் வழிவந்த நூலாகக் கருதப் பெறுகின்றன. ஆகமம் என்பது வேத சாஸ்திரம் எனத் தமிழ் லெகசிகனும், ஆகமா என்பது ஆப்தவாக்கியம் என்றும், ஆப்த வாக்கியம் என்ருல் இறைவனால் மொழியப்பட்ட நூல் என்றும் பொருளுரைக்கப்படுகின்றன. ஆகமம் என்னும் வடமொழிப்பதத்தின் பொருள் தொன்று தொட்டு வரும் அறிவு என்பதாகும். 'வேதம் பசு; அதன்பால் ஆகமம்' என்பார் திருமூலர். எனவே ஆகமம் என்பது வேதத்தின் வழிவந்த சாத்திர நூல் ஆகும்.

இந்நூல் திருக்கோவில் அமைப்புப் பற்றியும் சமயக் கோட்பாடுகள் பற்றியும் சமயச் சார்பற்ற உலகியல் நிலையிலிருந்து, சமயச் சார்புகள் நிறைந்த உயர்ந்த வாழ்வாகிய செந்நெறியை அடைவதற்கு மனிதனுக்குத் தேவையான தீக்கைகள் பற்றியும், வழிபாட்டு நெறிகளைப் பற்றியும் எடுத்துரைக்கின்றன.

## ஆகம வழிபாட்டின் தேவை

திருக்கோவில் வழிபாடென்பது மனிதனை இறைவனோடு இணையச் செய்யும் இணைப்புச் செயலாக அமைகிறது. அறியாமையில் இருக்கும் ஆன்மாக்களுக்கு இறைவனின் பெருமையையும் ஆற்றலையும் அறியத் தருகிறது. ஒரு நோக்கமின்றி அலையும் மனங்களை ஒருமுகப்படுத்தி இறைவனோடு கலந்து தெய்விக வாழ்வு வாழ வழிபாடு தேவையாகிறது. எனவே, இறைஞானம் இல்லாத ஒருவன் கோவில் வழிபாட்டின் வழியே தான் இறைவனை நோக்கி நடக்கமுடியும்.



அருள்மிகு இராமசுவாமி கோயில்
கும்பகோணம்

தோத்திர அறிவில்லாதவன் இறைவனை வழிபட சடங்குகள் துணைபுரிகின்றன. மேலும் வழிபாட்டுக் கிரியைகள் மனிதன் இறைவன்பால் கொண்டிருக்கும் அன்பை வெளிப்படுத்தும் பான்மையானதாக அமைகின்றன. வழிபாட்டில் ஈடுபடுவதன் பொருட்டு மனிதனிடம் அமைதி குடிகொள்கிறது.

## வழிபாட்டு முறைகள்

வழிபாட்டு முறைகள் நான்காக வகுக்கப்பெற்றுள்ளன. அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவாகும்.

### சரியை :

ஆண்டான் - அடிமை உறவிலிருந்து செயல்படுவது. இது வழிபாட்டின் முதல்நிலை. இதனைத் தாசமார்க்கம் என்பர். சரியைத் தொண்டாவன: 1) திருக்கோவில் அலகிடுதல், மெழுகுதல் 2) கோவிலை ஒட்டி நந்தவனம் அமைத்தல் 3) திருவிளக்கிடுதல் 4) இறை

வனைப் புகழ்ந்து பாடுதல் 5) அடியவர்களைக் கண்டால் பணிந்து வணங்கி அவர்களுக்குத் தொண்டு செய்தல் என்பனவாம்.

## கிரியை :

மூலவரின் முன்னின்று செய்யும் வழிபாட்டினையே கிரியை என்பர். இது தந்தை - மகன் உறவில் நின்று செய்யும் திருத்தொண்டு. இதனைச் சற்புத்திர மார்க்கம் என்பர். இது தீக்கைப் பெற்றவர்கள் மட்டும் திருக்கோவிலில் புரியும் பூசையாகும். இத்தொண்டாவது; மணமலர், தூபம், தீபம், மஞ்சனம், அமுது என்னும் செயல்களைக் கைக்கொண்டு பஞ்ச சுத்தி செய்து, உண்மையோடு இறைவனை அர்ச்சித்தலாகும்.

## யோகம் :

தோழமை உறவில் நின்று இறைவனுக்குச் செய்யும் தொண்டாகும். இதனைச் சக மார்க்கம் என்பர். இவ்வழிபாடு குண்டலினி சக்தியை ஆறு ஆதாரங்களின் வழி மதிமண்டலத்தின் மேலேற்றிச் சோதி தியானத்தில் இன்ப அநுபவத்தில் திளைத்திடுதல் ஆகும். இவை எட்டு உறுப்புகளின் அடிப்படையில் செய்யப்பெறுகின்றன. அவை இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன.

## ஞானம் :

நாயகன் - நாயகி பக்தி நிலையில் நின்று இறைவனுக்குத் தொண்டு செய்தல். இதனைச் சன்மார்க்கம் என்பர். இவ்வழிபாடு சோடச உபசார முறை என்பதாகும். இவ்வழிபாடு ஞான நூல்களை ஓதுதல், ஓதுவித்தல், கேட்டல், கேட்டுவித்தல், சிந்தித்தல் முதலியவற்றைக் கொண்டதாகும்.

## சோடச உபசார வழிபாட்டு முறை :

ஆகம வழிபாட்டு முறையில் குறிப்பிடத்தக்கது சோடச உபசார முறை என்பதாகும். இது நான்குவித நெறியின் அடிப்படையில் செய்யப்பெறும் வழிபாட்டுச் சடங்காகும். சோடச உபசாரம் என்பது பதினாறு வகையான பணிவிடைகளைக் குறிப்பதாகும். (சோடசம் - பதினாறு; உபசாரம்-பணிவிடை) அவை;

1) ஆசனம் - இறைவனுக்கு இருக்கை அளித்தல் 2) பாத்யம் - கால்கழுவ நீர் தருதல் 3) அர்க்யம் - கைகழுவ நீர் தருதல் 4) ஆசமநீயம் - பருகுவதற்கு நீர் தருதல் 5) அபிடேகம் - திருமுழுக்கு நீராட்டல் 6) வஸ்த்ரம் - ஆடை அணிவித்தல், 7) கந்தம் - நறுமணப் பொருள்கள் அளித்தல் 8) புஷ்பம் - மலர் மாலைகளைச் சூட்டுதல் 9) தூபம் - அகில், சந்தனம் முதலிய நறுமணப் புகையிடல், 10) தீபம் - ஒளி விளக்குகளால் மும்முறை வலமாகச் சுற்றல், 11) நைவேத்தியம் - உணவுப் பொருள்கள் படைத்தல், 12) கற்பூரம் - கற்பூரம் காட்டுதல், 13) சாமரம் - கவரி வீசுதல், 14) ஆலவட்டம் - விசிறி வீசுதல், 15) சக்கரம் - குடை கவித்தல் 16) தர்ப்பணம் - கண்ணாடி காட்டுதல்.

## வழிபாட்டு வகைகள் :

திருக்கோவில் வழிபாட்டில் ஆத்மார்த்த பூசை, பரார்த்த பூசை இரண்டும் முக்கிய வகையாகும்.

**ஆத்மார்த்தம்:** தனக்கும் தன்னைச் சார்ந்தவர்களுக்கும் நன்மை அளிக்கும்படி வீட்டில் செய்யப்பெறும் பூசையானது ஆத்மார்த்த பூசை எனப்படும்.

**பரார்த்தம்:** கிராமங்களிலோ நகரங்களிலோ உள்ள



அருள்மிகு குற்றாலநாதர் திருக்கோயில் - குற்றாலம், தென்காசி.
—கமலா மாரியப்பன்

வர்களின் நனமையைக் கருதி தேவர், முனிவர, மனிதர ஆகியவர்களால் நிறுவபபெறற கோவிலகளில செயயபபெறும பூசை ப்ரார்த்த பூசை எனப படும். ஆத்மாரதத பூசையை முடித்தப் பினனரே பரார்த்த பூசை செய்தல் வேணடும.

## ஆத்மார்த்த பூசை செய்வோருக்குரிய விதிகள்:

ஆசாரியர், பட்டர், குருக்கள் போன்றோர ஆதமார்தத பூசை செயய உரியவர்கள ஆவர். இவர் பஞ்ச சுததிகளை (ஐந்து விதமான ஒழுகுமுறைகள்) முறையாக ஆற்றுதல் வேண்டும். பூசைசெய்வோர் நீராடித தூய உடை உடுத்தித் தக்கதோர ஆசனத்திலிருந்து கொண்டு மூன்று முறை ஆசமனம் செய்தல் வேணடும். வலது குடங்கையால் மந்திர பூரவமாக நீரை மூன்று முறை உட்கொள்வதையே ஆசமனம் என்பர். ஆசமனம் செய்து விபூதி அணிந்து கொள்ள வேண்டும. உருத்திராடச மாலை அணிவதும் மிக முககியமானது. ஆதம சுததி ஐநது வகைபபடும.

**ஆத்ம சுத்தி:** சைவரகள தததுவங்களை மூனறு படிநிலைகளில குறிபபிடுவர. அவை. 1) ஆத்மதததுவம் 2) வித்தியா தத்துவம் 3) சிவதததுவம். தத்துவ சுததியின விளைவாக ஆனம போதம நீஙகி, சிவபோதம் தலைககூடுவதாகப பாவனை. இதுவே பஞ்ச சுத்திகளில் ஒனறான ஆதம சுத்தியின இயல்பு. இப்பாவனை முறையைக கையாள்வது இன்றியமையாதது.

**ஸ்தானசுத்தி:** வழிபாடு செய்யும இடததை மநதிரம சொலலி நீர் தெளிதது, சுத்தம் செய்தல் வேணடும்.

**திரவிய சுத்தி:** வழிபாட்டுக்குரிய பொருள்களை நீரால் சுத்தி செய்தல் வேணடும்.

**மந்திர சுத்தி:** மூலமந்திரம, பஞசப பிரமமமநதிரங்கள், சடஙக மநதிரஙகளை முறையோடு உசசரிததல் வேணடும.

## இறைவன் :

சாநதி நிததியத்தை எப்பொழுதும் யாசிததல இலிஙக சுததி எனபர. பஞச சுததிகளையும் செயது பாவனையோடு வழிபாடு செய்தல் வேண்டும.

## வழிபாட்டுக் காலங்கள் :

திருககோயிலில நிகழும் வழிபாட்டினை மூன்றுகப் பிரிப்பர். அவை நித்தியம, நைமிததிகம், காமியம் என்பதாகும். நித்திய பூசை என்பது நாள்தோறும் நிகழும் ஆறுகால வழிபாட்டைக குறிக்கும. ஏதேனும் நிமித்தம் (சாசனம) பறறி நிகழ்வது நைமித்திகம். இதனுள சிறப்பு வழிபாடுகளும அடங்கும். தனிபபடடவர்கள வேண்டுதலின் பேரில் நடத்தப்பெறும் வழிபாடு காமியம் எனபதாகும்.

## வழிபாட்டின் பயன் :

வழிபாட்டின் சிறபபை,

மானுடப் பிறவிதானும் வகுத்தது
மனம் வாக்கு காயம்
ஆனிடத் தைந்துமிகும் அரசர்
பணிக்காக அன்றே
வானிடத் தவரும் மணிமேல்
வந்தான்தானை அர்ச்சிப்பர்
ஊனொடுத் துடிலும்மூடர் ஒன்றை-
யும் உணரார் அந்தோ.

(சிந்தியார் சூ.2, அதி.4 பா.92)

எனும் சிவஞான சித்தியார பாடல் உணர்ததும்.

இறையருள மனித வாழ்க்கையை மேம்படுததுகிறது; வளப்படுததுகிறது. மனிதனைத் தெய்வநிலைக்கு உயர்த்துகிறது. பக்திநெறி மனிதனை ஞானநெறிக்கு அழைத்துச்



**ஸ்ரீமிருடேஸ்வரர் திருக்கோயில் - மிருடேஸ்வரர் கர்நாடக மாநிலம்.**

செல்கிறது. மேலும் வழிபாட்டின் வழி மனிதனுக்கு ஆன்ம வளர்ச்சி ஏற்படுத்துகிறது. எல்லாவற்றையும் விட வாழ்வின் உயிர்நாடியாகக் கருதப்பெறும் 'நம்பிக்கை' இறைவழிபாட்டின் வழியே மாந்தருக்குக் கிடைக்கிறது. மேலும் கூட்டு வழிபாட்டால் மனித அன்மையும் நேயமும் வளர்கிறது.

திருக்கோவில் திருவுருவங்களுக்கு அபிஷேகங்களினவழி மனிதனுக்குப் பயன் கிட்டுகிறது. திருக்கோவிலில் எதிர் மின்னூட்டமும் ஈரப்பதமும் உள்ள காற்று மண்டலம் அமைந்திருக்கிறது. அந்தக் காற்று மண்டலத்துள் 'ஓம்' என்ற மந்திர ஒலி ஒலிக்கப் படுபோது திருமேனியில பட்டு எதிரொலிக்கிறது. இதனால் காற்று மண்டலத்தில் கலந்துள்ள மூலக்கூறுகள் வழிபடுவோரை அடையும் போது அவர்களுக்கு உடல் நலத்தை அளிக்கிறது. எனவே, 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்பது எண்ணுதற்குரியது.

### விண்ணப்பம்

தி.தி.தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித ஸேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத்தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராப்ட்' D.D. அல்லது 'பேஆர்டர்' (Pay Order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை பக்தர்கள் அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக்கொள்கின்றோம்.




தேரோடும் கலியன்

# வாரியார் சுவாமிகள்

திரு. மா. சீதாராமன் - பெருங்கட்டூர்.

### தோற்றுவாய் :

உலக மக்கள் அமைதியுடனும் இன்பமுடனும் வாழவேண்டும் என்பதே சான்றோர்கள் விருப்பம். ஆன்மீக நெறியினால் மட்டுமே உலக அமைதியை நிலைநாட்ட முடியும். ஆன்மீக ஒளியை உலகுக்களித்த சீலர்கள் பலரைப் பெற்றெடுத்த பெருமைக்குரியது பாரத பூமி.

முனிவர்கள், ஆழ்வார்கள், நாயன்மார்கள், அடியார்கள், ஞானிகள் முதலானோர் வாழ்ந்த காலத்தில் நாம் வாழக்கொடுத்து வைக்கவில்லை. இக்குறையைப் போக்க நம் வாழ்நாளில் அவதரித்தவர் வாரியார் சுவாமிகள்.

### அவதாரம் :

வடார்க்காடு மாவட்டத்தலைநகர் வேலூர். பாலாற்றங்கரையின் ஒருபுறம் வேலூரும் மறுபுறம் காங்கேய நல்லூரும் உள்ளன. காங்கேயன் (முருகப்பெருமான்) எழுந்தருளியுள்ள திருத்தலம் காங்கேயநல்லூர். இங்குதான் வாரியார் சுவாமிகள் அவதாரம் செய்தார். தோற்றம் 25-8-1906. தந்தை மல்லையதாசர். தாய் கனகவல்லி அம்மையார். குழந்தைக்குப் பெற்றோர் சூட்டிய பெயர் கிருபானந்தவாரி என்பது.

### கல்வியும் புலமையும் :

வாரியார் பள்ளி சென்று கல்வி கற்கவில்லை. மூன்றும்வயதிலேயே தம் தந்தையிடம் கல்வி பயிலத்தொடங்கினார். தந்தையார் பெரும்புலமை மிக்கவர்.. சிறந்த புராணப் பிரசங்கியார். எனவே தமிழ், வடமொழி ஆகிய இரண்டு மொழிகளிலும் வாரியார் புலமை பெற்றது தம் தந்தையாரிடமே!

தமிழ் இலக்கியங்கள், இலக்கண நூல்கள், இதிகாசங்கள், புராணங்கள், சிற்றிலக்கியங்கள் எனப் பலவகை நூல்களையும் முறையாகக் கற்றார். பஜனை கோஷ்டியினருடன் சேர்ந்து கொண்டு திருப்புகழ்ப் பாடல்களை விருப்புடன் பாடி வந்தார். இடையிடையே வீணை வாசிக்கவும் கற்றுக்கொண்டார்.

இவ்வாறு இளமை முதலே மொழிப்புலமையையும் இசை ஞானத்தையும் வாரியார் வளர்த்துக்கொண்டார்.

எட்டு வயதிலேயே வெண்பா புனையும் புலமைத்திறன் பெற்றார். பன்னிரண்டாம் வயதில் ஆயிரக் கணக்கான பாடல்களைத் தலைகீழாக ஒப்புவிக்கும் நினைவாற்றலையும் பெற்றார்.

### குருமார்கள் :

இலக்கண, இலக்கியக் குருவாக அமைந்தவர் இவர்தம் தந்தையாரே! ஞான குருவாக விளங்கியவர் அருணகிரிநாதர்! தீட்சா குருவானவர் பழநி ஈசான சிவாசார்யார்! தம் பன்னிரண்டாம் வயதில் தந்தைக்குத் தெரியாமல் மேல் விஷாரம் சென்று முகம்மதியப் பெரியார் ஒருவரிடம் திருக்குர்ஆனைத் தமிழில் எழுதிப் பயின்றார். தமக்குத் தாமே குருவாக அமைந்து பைபிளையும் கற்றார். இதனால் இவர் போப் ஆண்டவரைச் சந்தித்துப் பைபிளுக்கு விளக்கம் கூறிப் பாராட்டையும் பெறமுடிந்தது.



## சொற்பொழிவு :

வாரியார் தம் பன்னிரண்டாம் வயது முதலே சொற்பொழிவாற்றத் தொடங்கினார். எளிய நடையில் பேசுவார். இவர் சொற்பொழிவில் தமிழ் விளையாடும்; இனிமை கொஞ்சும்; உவமை உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்; இசை இன்பம் கொப்பளிக்கும்; இலக்கணம் இடைஇடையே வந்து வந்து செல்லும்; வடமொழிச் சுலோகம் வளப்பம் பெறும்; வினா விடை ஏற்றம் பெறும்; புலவர்க்கு விருந்து கிடைக்கும். மற்றையோர்க்கு அவர்தம் சொல்லமுதம் மருந்தாகும்; பக்திரசம் சொட்டும்; பண்புநலன் மிளிரும்; ஒழுக்கம் விழுப்பம் பெறும்; உயர் சொற்கள் வாழ்வு பெறும்; தத்துவ முத்துதிரும்; சித்தர் பாடல்கள் சிறப்புறும்; நகைச்சுவை நடமாடும்; நையாண்டியும் சுண்டி இழுக்கும்; இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழும் முழக்கமிடும்; ஆத்திகம் ஒளி வீசும்; நாத்திகம் இடம் தேடி ஒளியும்!

சிறுவர்கள் பதில் கூறிப் பரிசு பெறுவர். பெரியவர்கள் தேனில் விழுந்த வண்டாகித் தம்மை மறந்து மயங்கித் திளைப்பர்; கடவுள் மறுப்புக் கொள்கையினரும் அவர்தம் தமிழ்ப் புலமைக்கு ஆளாவார். விரும்பிக் கேட்போர் வேண்டியவெல்லாம் பெறுவர்; கேட்க விரும்பாதவரும் கேட்கத் தொடங்கிவிட்டால் அவர்தம் சொற்பொழிவில் நனைந்து அடிமையாவர்!

வாரியார் சொற்பொழிவாற்றும் இடம் பல்கலைக்கழகம் போல் தோன்றும்; நாடக மேடையாகவும் காட்சி தரும்; நடன அரங்கமாகவும் மாறிவிடும்; இன்னிசைக்கச்சேரி நிகழும் இடமாகவும் ஒலிக்கும்; மூத்தோர் ஒருவர் அறிவுரை கூறும் குடும்பம் போலும் தோன்றும்; சாத்திரங்களைப் புகட்டும் பாடசாலையாகவும் ஆகும்; சொற்சிலம்பக் கூடமாகவும் சொலிக்கும்; பக்தி நெறியும் காட்டும்; முத்தியையும் கூட்டும்!

மொத்தத்தில் வாரியார் கற்பகத் தருவாகக் காட்சியளிப்பார்!

வாரியார் சொற்பொழிவு நிகழ்த்தாத நாளும் இல்லை; நோயென்று பாயில் படுத்த நாளும் இல்லை!

## சமுதாயப்பணி :

**வாரியாரின்** புலமையும், சொற்பொழிவும், **உழைப்பும்** சமுதாயப் பணிக்கே பயன்பட்டது. சொற்பொழிவு மூலம் நன்கொடைகளைத் திரட்டினார். அறக்கட்டளைகள் தொடங்கினார்; கல்விச்சாலைகள் தோற்றுவித்தார்; அனாதைச் சிறுவர்களுக்கு உணவும், உடையும், இருப்பிடமும் தந்து கல்விக் கண்களையும் திறந்து வைத்தார்.

அருணகிரிநாதர் அறக்கட்டளையால் இன்றும் பன்னிருவர்க்கு இன்னமுதம் அளிக்கப்படுகிறது. திருப்பராய்த்துறை ராமகிருஷ்ண குடில் வாரியாரின் சமுதாயப் பணிக்குச் சான்றாக வானோங்கி நிற்கிறது!

கல்வி கற்க விரும்பும் ஏழை மாணவர்க்கு மாதந்தோறும் தேதி தவறாமல் பண உதவி செய்து வந்தார். கல்வி கற்றோர் பலர். பட்டம் பெற்றோர் பலர்; பதவி பெற்றோரும் உளர்.

## திருப்பணிகள் :

'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' என்று எடுத்துச் சொல்வார்; சொல்லும் வண்ணம் தானும் நிற்பார். மக்களுக்குத் தொண்டு செய்ததைப் போலவே மகேசனுக்கும் தொண்டுகள் செய்தார்.

சுவாமிகளால் திருப்பணிகள் செய்யப் பெற்ற திருக்கோயில்கள் பல. அவர் திருப்பாதம் படாத திருத்தலங்களே இல்லை. பட்டி தொட்டியெங்கும் அவரின் அருட்பார்வை சென்றது! சென்றதால் சிறுகோயில்களும் புனர்வாழ்வு பெற்றன. சுவாமிகளின் திருப்பணியால் கோயில்கள் திருத்தம் பெற்றன; குடமுழுக்கும் கண்டன. குடமுழுக்கு காணவும் நிறைவாகச் சுவாமிகளின் அருளுரை கேட்கவும் மக்கள் கூட்டம் அலைமோதும்! சோறும், நீறும், பேறும் பெற்று மக்கள் முத்தியின்பம் கிடைக்கப்பெறுவர்.

தம் முப்பதாம் வயதில் வயலூர் முருகப் பெருமான் திருக்கோயில் திருப்பணியை மேற்கொண்டு செம்மையுறச் செய்து முடித்தார்.

வடலூர் வள்ளற் பெருமானுக்கும் வையகம் உய்யுமாறு தம்வாழ்நாளில் வண்ணமிகு திருக்கோயில் கண்டார்.

இவரால் திருப்பணிகள் செய்யப்பெற்ற கோயில்கள் எண்ணிலடங்கா! இவர் திருப்பணிகளால் கோயில்களும் சமயமும் புத்துயிர் பெற்றன.

### நூலாசிரியர் :

சிறிதும் பெரிதுமாகச சுவாமிகள இருநூற றுககும் மேறபட்ட நூல்களை இயற்றியுள்ளார. இவர நூலகளில் பக்திரசம் சொட்டும்; ஒழுகக நெறி உணர்ததப்பெறும்; சமயக கருத்துககள ஆஙகாஙகே மின்னலிடும்.

பாரதம், இராமாயணம், கந்தபுராணம், பெரிய புராணம், திருவிளையாடறபுராணம், திருப்புகழ், கந்தரலஙகாரம், கந்தரநுபூதி, தமிழிலக்கியங்கள், வடமொழி இலககண இலககியங்கள, வேதங்கள், உபநிடதங்கள் முதலான எண்ணிலடங்கா நூல்களுக்கு இவர் இயற்றியருளிய நூல்கள் விளக்கம் தரும்.

### உரை நூல்கள் :

கந்தரநுபூதி, கந்தரலங்காரம் முதலான நூலகள் பலவற்றுக்கு அருமையான உரைகள் எழுதியுள்ளார. அருணகிரிநாதரின திருபபுகழ் அரும் பெருஞ்சொற்களால் ஆன சந்தப பாடல்கள். இபபாடல்களைப் பாடுவதும் கடினம், பொருளுணர்தலும் கடினம. சுவாமிகள்தாம் திருபபுகழைச் சந்தமுடன் பாடுவார். எளிமையாக விளங்கிக் கொள்ளும் வகையில் உரைவிளக்கம் செய்வார்.

காந்தியடிகள், தாகூர், டால்ஸ்டாய ஆகியோரின் கருத்துகள் இவரது நூல்களிலும், சொற்பொழிவிலும், உரையாடலிலும எதிரொலிக்கும்.

### சொல்லாட்சி :

எழுபது ஆண்டுகளுக்கு மேலாகச் சுவாமிகள் சொற்பொழிவு ஆற்றியுள்ளார். கடைசி வரை கணீரென்று அவர் குரல் ஒலித்து வந்தது. நகைச்சுவையுடன் ஆன்மீகம் புகட்டிய அவ்வாசானின் சொல்லாட்சி வியக்கத்தக்கது. சுவாமிகளின் சொல்லாட்சிககு ஓரிரு சான்றுகளைக காண்போம்.

காமன் என்னும் சொல் மனமதனைக குறிககும. 'காமன் எந்நாட்டவரககும் 'Common' எனபார. எனவேதான் அவனுககுக் காமன் (Common) எனறு பெயர் வநததெனபார. "அவரோ அருந் தபசி அவருக்கு அருந்த பசி" எனபார். இவ்வாறு அவர்தம் சொற்பொழிவில் எண்ணற்ற சொல்லாட்சியும், சிலேடைச சொற்களும் வந்து இன்பம் தரும்.

### வள்ளல் வாரியார் :

சொறபொழிவு மூலமும், நனகொடை மூலமும், நூல விறபனை மூலமும தாம பெறற பொருளைப் பலவேறு திருபபணிகளுககு அளளி அளளிக கொடுதது வநதார. வலது கை கொடுபபதை இடது கை அறியாமல - விளமபரமின்றித் தம் வள்ளல தன்மையைச செலுததி வநதார். கடைசி முறையாகத் தாம் லணடன மாநகரத்துக்குப் புறப்பட்ட போது நிகழ்ந்த நிகழ்ச்சி கேட்பவர் நெஞசை நெகிழச செய்யும.

சுவாமிகள் லணடன புறபபடத தயார செயது கொண்டிருநதார. அப்போது அவர பெட்டியில் இருநதது வெறும ஐம்பது ரூபாய மட்டுமே! அபபோது திருததணியிலிருநது ஏழை அனபர ஒருவர அங்கு வநதார. சுவாமிகளிடம தன் இக்கடடான நிலைமையினைச சொலலிப் பண உதவி செயயுமாறு கேட்டுக கொணடார. தம்மிடமிருநத ஐமபது ரூபாயையும் சுவாமிகள அவருககுக கொடுததுவிடடு வெறுங்கையுடனேயே புறப்படடார்.

### சமயப் பற்று :

பத்தொன்பதாம் வயதில் வாரியாருக்கும் அமிர்தலட்சுமி அம்மையாருக்கும் திருமணம் நடைபெற்றது. அவரகளுக்குக் குழந்தைச் செல்வம் வாய்க்கவில்லை. உலக மககள அனைவரையுமே தம் மக்களாகச சுவாமிகள கருதினார. சமயப் பறறே அவரக்கு வாழ்க்கையின் பிடிபபானது. எனவே, அவர் தமவாழநாள முழுவதும சமயபபற்று ஒன்றையே தம் உயிர மூசசாகக் கொண்டு வாழந்தார்.

சமயம் வளரவேண்டும் எனபதறகாக நாளெலலாம் தொணடு செயது வநத சுவாமிகள தம் நிலையிலிருநது சறறு விடடுககொடுதத நிகழசசியும் உலகறிநததே! அதாவது தம சமயப பறறினை விளககத திரைப்படததிலும் தோன்றினாரனறோ!

### காட்சியின் மாட்சி :

சுவாமிகளின் திருமேனியைக காண்பது கண் கொள்ளாத் தெய்வீகக் காட்சியாக இருக்கும.

நீறுபூசிய நெற்றி. ருத்திராட்ச மாலைகள் விளங்கும் மார்பு. சாலவை ஒளிரும் திருத்தோள்கள். நடமாடும் திருநாக்கு. நயம் தோன்றும்

பெருவாகத புன்னகை தவழும் திருமுகம். பொன்னை வாய்ச் சிரிப்பு. பொன்னிற மேனி. நெடிய உருவம். அழகொழுகும் பெரு வயிறு. அருள் பொழியும் திருக்கண்கள். அமைதியே வடிவான தோற்றப் பொலிவு. பஞ்சகச்ச உடை.

ஐந்து மணி நேரம் கூட நின்றபடியே உரை நிகழ்த்தும் அந்தக் காட்சியைக் கண்ட கண்கள் பாக்கியம் செய்த கண்கள்.

## முருக வழிபாடு :

"சைவமும் தமிழும் முருக வழிபாடும் தழைத்து வளரப் பாடுபட்டவர் வாரியார் சுவாமிகள்" என்று காஞ்சி மாமுனிவரால் பாராட்டப்பட்ட சுவாமிகளுக்கு முருக வழிபாடே உயிர் மூச்சாகக் கடைசி வரை இருந்து வந்தது.

வயலூர் முருகப்பெருமான் வடிவிலமைந்த பஞ்சலோகச் சிலைக்கு நாளதோறும் வழிபாடு செய்துவந்தார். வழிபாடு முடிந்த பிறகே உணவருந்துவார். 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி'ச் சுவாமிகள் செய்யும் வழிபாடு புண்ணியம் செய்தவர்கட்கே காணக் கிடைத்தது. செல்லுமிடமெல்லாம் வழிபாட்டுப்பெட்டகமும் கூடவே செல்லும். வெளிநாடுகள் சென்றபோதும் அப்படியே!

## பண்பு நலன் :

சுவாமிகள்பால் அமைந்திருந்த பண்புகள் பலராலும் பின்பற்றத்தக்கன. சுவாமிகள் அனைவரையும் ஒருசேர மதித்து வந்தார். பிறரை மதிப்பதில் அவருக்கு நிகர் அவரே! மனித நேயம் மிக்கவர்; பிறர்க்குதவும் உள்ளம் படைத்தவர்; சுற்றத்தாரால் சுற்றப் பெற்றவர்; பொறுமையே வடிவானவர்; சினத்தைக் கண்டறியாதவர்; பதற்றமில்லாமல் செயல்படுபவர்; பழகியவரை எந்நாளும் மறவாதவர்; தெளிந்த உள்ளம் படைத்தவர்; ஒழுக்க சீலர்; உண்மையே பேசுபவர்.

ஒழுக்கமில்லாத கல்வி, பக்தியில்லாத வழிபாடு, வழிபாடில்லாத வாழ்க்கை பயனற்றவை என்பது அவருடைய பண்புகளை வெளிப்படுத்தும் கருத்துகளாம்.

## சுறுசுறுப்பு :

சுவாமிகள் எப்போதும் சுறுசுறுப்பாகவே இருப்பார்; ஓய்வு என்பதை அவர் உடலும் உள்ளமும் அறிந்ததில்லை. பயணம், சொற்பொழிவு எழுதுதல், உரையாடல், பேட்டி தருதல், நாடிவந்தோரை நலம் கேட்டல் என்று இப்படியே நாள் பூராவும் செயல்பட்டுக் கொண்டேயிருப்பார்.

## விருதுகளும், பரிசும் :

சுவாமிகள் பெற்ற விருதுகளும், பரிசுகளும் பலப்பல. திருப்புகழ் ஜோதி, அருள்மொழி அரசு, சரஸ்வதி கடாக்ஷாம் ருதம் ஷட்பதானந்தா, இசைப் பேரறிஞர், கலைமணி, அமுதமொழிக் கொண்டல், திருப்பணிச் சக்கரவர்த்தி, திருப்பணி சரபம், சொற்பொழிவு வள்ளல், ப்ரவசன சாம்ராட், டாக்டர் என்பன போன்ற எண்ணற்ற விருதுகளும், பரிசுகளும் சுவாமிகளால் ஏற்றம் பெற்றன.

## வானில் கலந்தார் :

வாரியார் சுவாமிகள் தமிழ்க்கடல், அருட்கடல், இன்பக் கடல், இசைக்கடல், வண்மைக் கடல், அவருக்கு நிகர் அவரே!

வையகம் வாழ வானின்று வந்தவர் வாரியார். சைவமும் தமிழும், ஒழுக்கமும், பக்தியும் தழைக்கப்பாடுபட்ட அரும்பெரும் தொண்டர். வைணவ இலக்கிய நயங்களை வாரி வாரி வழங்கிய வள்ளல்.

காந்தியடிகளைப் போல் முதுமையில் பழமாகக் கனிந்து அழகொழுகும் காட்சி தந்தவர். ஆன்மீகத் தமிழ்ப்பழம், சிவப்பழம் எனக் கை கூப்பிப் பலராலும் வணங்கப்பட்ட வாரியார் சுவாமிகள் வானிலேயே கலந்துவிட்டார்.

அருளும் பொருளும் வழங்கிய அருளின்பக் கடல் மண்ணில் மலர்ந்தது விண்ணில் கலந்தது.

எண்பத்தேழு ஆண்டுகள் தெய்வத் திருமேனியுடன் மண்ணகத்தார்க்கு மருந்தாகிய சுவாமிகள் 7-11-1993 அன்று விண்ணவர்க்கு விருந்தானார்.

சுவாமியார் அருளிய அமுத மொழிகள் உலகுக்கு என்றும் வழிகாட்டிக் கொண்டிருக்கும்.

வாழ்க வாரியார் சுவாமிகள் திருநாமம்.



# ஞானச்சுடர் விளக்கு

திரு. க. கருப்பையா - இராஜபாளையம்.

இறைவன் சோதி வடிவி னன. அங்கு இங்கு எனாத படி எங்கும் நீக்கமற நிறைந் துள்ளவன். ஞானம் ஒளியு டையது. அஞ்ஞானம் இருள் மயமானது. ஞானமுடையோர இறைவனை உணர்வர். அஞ் ஞானியால் இறைவனை உண ரமுடியாது. உலகியல் நடை முறையில் ஒளியை ஏற்றிய வன் இருளைக் காணமுடி யவில்லை. ஒளியிலே திளைக் கிறான். கவலையோ, துன் பங்களோ அவனை அண்டுவ தில்லை. உலகமே யாண்டும இன்பமயமானதாக இறையின் பத்தில் திளைத்தவன் உணர் கிறான்.

ஆனால் இதற்கு நேரமா றாக இறையின்பத்தை நுகரா தவர்கள் அஞ்ஞான இருளில் மூழ்கியிருப்பர். துன்பக்கடலில் தத்தளிப்பர். ஆசை வலை யில் அகப்பட்டு அவதிக்குள் ளாவர். அனாவசியமான தொல் லைகளை அவர்களுக்காக்கிக் கொள்வர். அவனியே அவரக ளுக்கு அவதி மயமாகக் காட் சியளிக்கும்.

அஞ்ஞானிகளையெல்லாம் ஞானிகளாக்கித் துன்பக்கடலி லிருந்து கரையேற்றி ஈடில லாப் பேரானந்தத்துள் திளைக கச் செய்பவர்கள் அருளாளர கள்.

திருமாலின் திருக்கருணையில் ஆழ்ந்துபவர்கள் ஆழ்வார்கள். பன்னிரு ஆழ்வார்களும் அவ ரவர் நெறியில் இறையின்பத் தைத் தீந்தமிழ்ப் பனுவல்க ளாக வெளிப்படுத்தியுள்ளார்கள். அவை நாலாயிர திவ்வியப்பி ரபந்தமாக நமக்குக்கிடைத்துள் ளன. முதலாழ்வார்கள் எனப் போற்றப்படும் பொய்கையாழ் வார், பூதத்தாழ்வார், பேயாழ் வார் ஆகிய மூவரும் திரு மாலின் திருவருளால் திருக்கோ வலூர் என்னும் திருப்பதியில் எழுந்தருளியுள்ள திருமகள் நாத னைச் சேவித்தனர். இவர்கள் மூவரும் இறைவனை அறிந்த வர்கள். ஆனால் ஒருவரையொ ருவர் அறியாதவர்கள். மூவ ரையும் இணைக்கத் திருமால் திருவுளங்கொண்டார்.

உலக உயிர்களை உறங்கச் செய்யும் அஞ்ஞான இருளைச் சுமந்து கொண்டு இரவுப்



பொய்கையாழ்வார்

பொழுது வந்தது. பொய்கை யாழ்வார் இறைவனைச் சேவித் தபின்பு ஒரு இல்லத்தின் திண்ணையில் அவ்இல்லத்தா ரின் இசைவு பெற்றுப் படுத் திருந்தார். பின்பு பூதத்தாழ்வா ரும், பொய்கையாழ்வார் படுத் திருந்த அந்த இல்லத்திற்கு வந்து "படுக்க இடம் கிடைக் குமோ?" என வினவினார். உடன் பொய்கையாழ்வார் பூதத் தாழ்வாரிடம், "ஒருவர் படுக்க லாம் இருவர் இருக்கலாம். வாருங்கள்" என அழைக்க அவ ரும் அவ்வாறே செல்ல அவ் விருவரும் அங்கு அமர்ந்தனர். அதன்பின் பேயாழ்வாரும் அவ் இல்லத்திற்குச் சென்று, "இங்கு தங்க இடம் கிடைக்குமோ?" என வினவ பொய்கையார், "இங்குள்ள இடத்தில் ஒருவர் படுக்கலாம். இருவர் இருக் கலாம். மூவர் நிற்கலாம்" என்று கூறி அவரையும் அழைத் துக் கொண்டார். முத லாழ்வார்களாகிய அம்மூவரும் நின்று கொண்டு ஒருவரையொ ருவர் விசாரித்து அறிந்து அள விலா ஆனந்தம் கொண்டனர்.

இவர்கள் மூவரும் வெளியே செல்லமுடியாதபடி அருள்மழை பெய்ய ஆரம்பித்தது. இருளில் மூவரையும் மற்றொருவர் வந்து நெருக்குவது போன்று உணர்ந் தார்கள். நான்காமவர் யார்? என்று அறிய விளக்கேற்றினால் தான் முடியும். இவர்களிடம் விளக்கு, நெய், திரி போன்ற எவ்விதப் பொருளும் இல்லை. ஆனால் இறைப்பற்று இருந்

தது. அகமுகமாக உணாநத ஞானககண இருநதது. விளக கேறறுவதறகரிய புறபபொருட கள இலலாமல ஞானசசுடர விளககு ஏறறினார பொயகை யாழவார். இவவுலகததையே விளககாகவும, சமுததிரததையே நெயயாகவும, கதிரவனைத திரி யாகவும கொணடு இவ்வுல கியல துனபம நீஙகி திருமா லின திருவருள பேரினபம் பெற ஞானசசுடர விளககு ஏற்றினார். இதோ பொய்கையாழ்வார் ஏற றிய ஞானசசுடர் விளக்கு.

"வையம் தகளியா வார்கடலே
நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக-
செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன்
சொன்மாலை
இடராழி நீங்குகவே என்று"

உடனே பூதத்தாழ்வாரும் திரு மகள் நாதனைக் காண விரும்பி அவருடைய தூய அன்பையே


பூதத்தாழ்வார்

விளககாகவும், ஆரவத்தை நெய் யாகவும் சிநதையைத திரி யாகவும் கொண்டு ஞானச்சுடர விளககு ஏறறினார். இதோ அநத ஞானசசுடர் விளககு.

"அனபே தகளியா ஆர்வமே
நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா-
நன்புருகி
ஞானச்சுடர் விளக்கு
ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்"

இவ்வாறு முதலிரு ஆழ்வார் பெருமக்கள் ஏறறிய இருபெ ரும் ஞானசசுடர் விளக்கு களின ஒளியிலே திருமாலின் திவ்விய காட்சி காண முடிந் தது. பேயாழ்வார் தாம் கண்ட திருமாலின் திருக்கோலத்தைப் படம் பிடித்துக் காட்டுவது போன்று தீந்தமிழ்ப் பனுவல் பாடி நம்மையும் காணுமாறு செய்கிறார். முதலில் திரும கள் திருமாலவனின் திருமார் பில் அமர்ந்திருக்கும் அந் தக் கோலக்காட்சியைக் காண்கி றார். மணிவண்ணனின் திருமே னியையும் காண்கிறார். துஷ் டர்களை அழிதது பக்தர்களைக் காக்கும் பொன்னாழியைக் காணகிறார். அருள்புரியும் சங் கம கையில் உள்ளதைக் காண் கிறார். இவ்வாறு திருமாலின் திருககாட்சியைக் காணும் பேறு பெற்ற பேயாழ்வார் நம்மையும் ஞானக்கண் கொண்டு காணும் படி பாடியுள்ளார. இதோ அவ ருடைய திருபபாடல்.

"திருககண்டேன் பொன்மேனி
கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும்
கண்டேன் செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன்
புரிசங்கம் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பால் இன்று."


பேயாழ்வார்

இவ்வாறு அஞ்ஞானமாகிய இருளைப் போக்கி ஞானமாகிய சுடர் விளக்கு ஏற்றினால் மெய்ப்பொருளாகிய பரம்பொ ருள் காட்சியைக் காணலாம். புற இருளை நீக்கி ஒளியை ஏற் றுவது போல் நெஞ்சத்து அக இருளை நீக்கி ஞானத்தைப் பெறலாம். பிறவிப் பெருங்கட லைக் கடந்து பேரின்பமெய்திப் பெருவாழவு பெறலாம்.



# ஏழரையின் ஏற்றம்

திரு. எம்.எஸ். பிச்சுமணி - சென்னை.

நடந்து வரும் இககலியுகத்தில் பொதுவாக $7\frac{1}{2}$ (ஏழரை) என்ற எண்ணைக் குறிப்பிட்டுச் சொல்லு போதும், மனதில் நினைத்துக் கொள்ளும் போதும் ஸ்ரீசனிபகவானின் தனித்தன்மையை நன்கு உணரமுடியும்.

ஒருவரது ஜனன காலத்தில் பிறந்த நேரத்தில் சஞ்சரிக்கும சந்திரனின் நிலையை வைத்து அவரது இராசி குறிப்பிடப்படும்.

அந்த ஜாதகர ஜனன மரண, இராசி நிலைக்கு ' முன்பான இராசியில், ஸ்ரீசனிபகவான் பிரவேசிககும காலமான இரணடரை வருடங்கள், அதற்கு பின பான இரணடரை வடடங்கள், அதறகு பினபான இராசி நிலைக்குப் பிரவேசிக்கும கால மான இரண்டரை வருடங்கள் ஆக மொத்தம் ஏழரை ஆண்டு காலங்கள் மொத்த வருடங்களாக ஜ்யோதிஷ சாஸ்த்திரத்தில் விரிவாககவே சொல்லபபட்டுள்ளது.

மேலே சொன்ன ஏழரை ஆண்டு காலங்களையும் நல்ல படியாக கடந்து செல்ல தோஷ பரிகாரங்களையும் எடுததுச் சொல்லி ஒவ்வொரு சனிககிழமைகளிலும் ஸ்ரீசனிபகவானை வழிபடச்செய்வதுண்டு.

அந்த நம்பிக்கையின் அடிப்படையில் இன்றும் மனித வர்க்கம் - பிரார்த்தனைகளையும, வழிபாடுகளையும் தவறாது செய்து வருவதைக் கண்கூடாகக் காணலாம்.

இதுபோல முன்பொரு சமயம், (கலியுகத்திற்கு முன்பான காலத்தில்) தேவர்கள் நலம் பெரும் பொருட்டு "அமிர்தத்தை" பெறும் எண்ணத்தோடு பாறகடலை கடைய ஆரம்பித்தார்கள்.

தேவரகளும, அசுரரகளும பாறகடலைக கடையும் நேரத்தில அமிரதத்துடன் ஆலகால விஷமும் தோன்றியது.

கொடிய ஆலகால விஷததை சிவபெருமான் ஏற்றுககொணடு நீலகண்டனாக மாறினார. இனிய அமிரதத்தை தேவரகளுககு வழஙகினார.

அமிரதத்தைப் பெறறுக் கொண்ட தேவர்கள் சிவபெருமானை வழிபட்டார்கள். சந்தோஷம் கொண்ட சிவபெருமான் திருநந்தி தேவரின் இரு கொம்புகளுககிடையே திருநடனம் புரிந்தார். அச்சமயம் சரஸவதி வீணை மீட்ட, இந்திரன் புல்லாங்குழல் ஊத, பிரமமா தாளம போட மறற அனைத்துத் தேவர்களும் ஒன்றுகூடி சிவபெருமானை வழிபட்டு, அவரது அருளையும பெற்றார்கள்.

இநத குறிப்பிடட கால கடடததை பிரதோஷ காலமாக எணணி வழிபட்டாரகள்.

ஒவ்வொரு மாதததிலும் சுக்கில கிருஷ்ண பட்சத்தில் வருகின்ற திரியோதசி திதியில் சூரிய அஸ்த்தமனததிற்குமுன் மூன்றே முக்கால் நாழிகையும் பின்புள்ள மூன்றே முக்கால் நாழிகையும் உள்ள காலமே பிரதோஷ காலமாகும். ஆக ஏழரை நாழிகை காலம் பிரதோஷ காலமாகும்.

"இந்த பிரதோஷ காலத்தில் அனைத்துத் தெய்வங்களும சிவ சன்னிதியில் இருப்பதால் ஒரே சமயத்தில் எலலா தெயவங்களையும் வழிபடடப் பெரும் நற்பலனகளைப் பெறவே இனறும் மனித வரக்கம் பிரதோஷ காலங்களில் சிவ சன்னதியில் கூடுவதைக் கண்கூடாகக் காணலாம்.

எனவே வருடங்களும் நாழிகைகளும் மனித குலத்திற்கு ஏற்றம் கொணடவைகளாகும்.

ஸ்ரீசனி பகவானின் அருளும், சிவபெருமானின் கருணையும் பெறுவது உறுதி. தோஷ காலங்களில் இறைவனை வழிபடச் செயய நமது ஆனறோர்கள் காடடிய வழிபாட்டுத் தத்துவம் என்றுமே நிலைத்து நிற்கும் என்பதற்குச சந்தேகமே இல்லை.



# காளிய நாகம் - சரணாகதி

திரு. எம்.என். திருமலய்யா - சேலம்.

ஸ்ரீ ராமர ஸ்ரீகிருஷ்ணர்களும் சம்பூரண அவதாரங்கள் இருவருடைய பூலோக ஜனனம் கோகுலம் பிரபஞ்சம். பசுக்கள்



ஜீவர்கள். ஸ்ரீகிருஷ்ணனுடைய கோகுலவாசம் ஒரு திருஷ்டாந்தம்.

கோகுலத்தில் யமுனை நதிக் கரையிலே காளிங்கன்மடு என்ற இடம் இருந்தது. அந்த வட்டத்துக்குள் எந்த ஜீவராசியும் அண்டுவதில்லை. காளியநாகம் தன் குடும்பத்துடனும், உற்றார் உறவினர்களுடனும், அந்த மடுவில் வசித்து வந்தான். இயற்கையிலேயே நாகத்துக்கும் கருடனுக்கும் பகை.

ஒரு சமயம் தன்னிச்சையாக கருடன் சர்ப்பங்களைப் பிடித்து தின்று கொண்டு வந்தது. சர்ப்பங்கள் தங்கள் பாதுகாப்புக்கு கருடனுடன் சமாதானம் செய்து கொண்டன. மாதம் இரு முறை அமாவாசை பௌரணமி தினங்களில் யமுனை நதிக்கரையில் இருந்த மரத்தினடியில் மீன் உணவை வைத்து விடுவதாக சர்ப்பங்கள் கூறின. நீண்ட காலம் இதனைத் தவறாமல் செய்து வந்தன. வீரிய விஷமுள்ள காளியன் கள்ளத்தனமாக ஒருநாள் அந்த மீன் உணவை சாப்பிட்டு விட்டது. கருடன் கோபம் கொண்டு காளிய நாகத்தை நன்குப் புடைத்ததுடன் அந்த மடுவில் இருந்த மீன அரசனை கவ்விக் கொண்டு போயிற்று. மற்ற மீன்கள் சௌபாரி ரிஷியிடம் முறையிட, அவைகளின் பேரில் கருணைக் கொண்டு கருடன் இந்த மடு இருந்த எல்லைக்குள் வரின் கெடுதல் சம்பவிக்கும் என்று சாபமிட்டு விட்டாராம்.

சபிக்கப்பட்ட மடுவின் காத எல்லைக்குள் கருடன் இனி வரமுடியாது என எப்படியோ காளிய நாகம் தெரிந்து கொண்டு பயத்தின் காரணமா

கத் தன் உற்றார் உறவினருடன் இந்த பள்ளத்தில் வசித்து வந்தது.

யமுனை நதியின் கரையில் நாகம் இருந்த இடத்தினருகில் பாலகன் கண்ணன் தன் சிநேகிதர்களுடன் பந்து விளையாடிக் கொண்டிருந்தான். பந்து அந்த தளத்துப் பள்ளத்தில் போய் விழுந்து விட்டது. விளையாடிக் கொண்டிருந்த கோபாலகர்கள் "கண்ணா, இப்பள்ளத்தில் கொடிய நாகம் வசிக்கிறது. இந்த மடுவின் நீரை எந்த பிராணியும் பருகுகிறதில்லை" என்றார்கள். அப்போது குழந்தை கண்ணனுக்கு வயது ஆறு. கண்ணன் அவர்களுக்குத் தைரியமளித்துவிட்டு ஒரே பாய்ச்சலில் அந்த மடுவின் நடுவில் குதித்த மாத்திரத்தில் தண்ணீர் தத்தளித்துத் தளும்பியது. காளியன் திடுக்கிட்டு கண்ணனைக் கடிக்க ஆரம்பித்தது. இரண்டாயிரம் கண்களிலிருந்து அக்னிப் பொறிகள் பறந்தன. விஷம் அம்ருதமாக மாறி வந்தது. கண்ணன் நாகத்தின் வாலை ஒரு கையிலும் அதன் படத்தை மறு கையிலுமாகப் பிடித்துக் கொண்டான். படத்தின் மேல் ஆடத் தொடங்கினான். ஆட ஆட கனம் அதிகமாகியது. ஆயிரம் சிரங்கள் நொறுங்கிக் கதறின. படங்கள் ரத்தம் கக்க ஆரம்பித்தன. இந்தத் தருணத்தில் நாக பத்தினிகள் கண்ணனிடம் சரணமடைந்து "பாபிகளுக்குத் தண்டனை கொடுப்பதால் அவர்களுடைய பாபம் எரிந்து விடுகிறது. செய்கைக்குத் தக்க தண்டனை. எங்கள் கணவர் நாசமடைய நேர்ந்ததற்கு பகவானை குற்றம் சொல்ல இடமில்லை. எங்கள் கணவரை புனித பாதங்களால் பரிசுத்தம் செய்தீர்கள். எங்களுக்கு மாங்கல்ய பிச்சை தரவேணும்" என்று வேண்டினர்.

அம்மாதரர்களின் முறையீடுகளுக்கு இரங்கி நாகத்தினிடம் "இந்த மடுவின் தண்ணீர் விஷமாகி இருக்கிறது. ஆகையால் இவ்விடத்தை விட்டு வேறு எங்கேயாவது உடனே போய் விடவேண்டும்" என்றார்.

காளியன் : "ஏ, பிரபு! உன்னைத் தவிர எனக்கு வேறு ஆதரவு இல்லை. வேறு புகலிடமில்லை. நீயே எனக்குப் புகலிடம். நான் புண்ணியம் எதுவும் செய்ததில்லை. பாபிகளில் நான் பயங்கரமான பாபி. மிக இழிந்தவன். நான் பல ஜனனமரண சக்கரங்களிடையில் சென்று கொண்டிருக்கிறேன். என் சரீரத்தினுடையவும் இந்திரியங்களிடையவும் ஏவுதலின்படி நடந்து கொண்டிருக்கிறேன். உன்னுடையவும், உன் பத்தினியினுடையும் பாதார விந்தங்களிலே நான் சரண் அடைகின்றேன்."

கண்ணன் : "எனது மங்களகரமான பாதங்களை நீ சேவித்திருப்பதால் கருடனால் இனி பயமில்லை."

மனிதனுக்கு சங்கல்பவிகல்பங்கள் எல்லாம் பல விஷப் படங்களே. ஒவ்வொரு புலனிலும் விஷம் நிறைந்திருக்கின்றது. ஆகையால் பகவானிடம் தன் மனதுக்கு மூக்கணாங் கயிறு போட்டு அதன் மீது தங்கள் பாதாரவிந்தங்களை வையுங்கள் என்று பிரார்த்தனை செய்ய வேண்டும்.

சுகபோகத்துக்கும் பக்திக்கும் என்றும் பகை. பக்தியில் சுகபோகம் சேர்ந்தால் பக்தி நசித்துப்போகும். வைஷ்ணவ மதத்தில் காணப்படும் பக்தியும் கடவுளைக் குழந்தையாகவும், காதலனாகவும் பாவித்து பாடிய பாக்கள் எல்லோருடைய கருத்தையும் கவரக்கூடியவை. பக்தியிருக்குமிடத்தில் பயம் இருக்க நியாயமில்லை. நம்மை பூரணமாக இறைவனிடம் ஒப்படைத்து விடுவதுதான் சரணாகதி.





தி.தி. தேவஸ்தானத்தாரின் அன்னதானதிட்டத்தின் கீழ் திருமலையில் நாளும் பத்தாயிரம் பக்தர்களுக்கு இலவச உணவு வழங்கப்படுகிறது.

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

### திருக்கச்சி நம்பிகள் அருளிய

# தேவராஜாஷ்டகம்

தி.அ. க்ருஷ்ணமாசார்யர், திருப்பதி.
(வித்வான், சிரோமணி)

நம்பீ - வேதம் விதித்தவற்றை மீறினேனென்கிறீர். அவற்ருல் உமக்கென்ன துக்கம் வந்தது. மேலும் நீர் விரும்பிய பயன் ஏது. ரக்ஷிக்கவேணுமென்கிறீர். ரக்ஷணமென்ருல் அநிஷ்டமான துக்கத்தைப் போககுவதும் இஷ்டமான ஸுகத்தை உண்டாக்குவதுமன்ருே? அவற்றை விளக்கமாகச் சொல்லும் என்று பேரருளாளன் வினவியருளியதாகக் கொண்டு பதலளிக்கிருர இவ்வைந்து ச்லோகங்களினால. தாம் பேரருளாளனிடம் பரிமாறும பரிமாற்றததையே கொண்டு, அபபெருமான் - இஙகுள்ள வரையில திருவாலவட்ட கைங்கர்யமும் இவ்வுடல் விட்டுச் சென்ருல் பரமபதத்தில் பகவதநுபவகைங்கர்யமுமே, தாம் விரும்பும் பலனென்பதை அறிந்துகொள்வானென்றெண்ணிப் பலனினனதென்பதை விவரியாமல், தாம் படும் துக்கங்களை விவரித்து அவை போகும்படி சீதள கடாக்ஷாம்ருத தாரைகளாலே தம்மை முழுககாட்டிக் குளிரச் செய்யவேணுமென்று ப்ரார்த்திக்கிருர்.

பாலைவனத்தில் வாஸம் செய்வதைப் போன்றது இவ்வுலகில் பிறநதும் இறந்தும் வாழ்வது. பிறப்புத்தொடர்ச்சியாகிய ஸம்ஸாரம் பாலைவனமென்றபடி. பாலைவனம புலி முதலிய துஷ்டமருகங்கள் நிறையப்பெற்று பயங்கரமானது. இவ்வுலக வாழ்வும் கெட்ட - கொடிய வ்யாதிகளால் நிறையப்பெற்று பயங்கரமாயிருக்கும். அவ்வனத்தில், அகப்பட்டாரை உள்ளேயிழுத்துக் கொள்ளுகின்ற கொடிய புதர்கள் உள்ளன. இஸ்ஸம்ஸாரத்திலும் சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் ஆகிய விஷயங்கள் தம்மிடம் அகப்பட்டாரைத் தம் வசமாக்கிக கொண்டு தீமையிழைப்பன பல உள்ளன. அவ்வனததில் மரங்கள இருக்கும். இஸ்ஸம்ஸாரத்தில் அவ் விஷயங்களை அனுபவிகக வேணுமென்ற ஆசைகள் இருக்கும். (பாலைவனத்தில் மரங்கள 'காயநது தீயநதுமிருககும. விஷயங்களைப் பற்றிய ஆசைகளும் சிறிது நிறைவேறிப் பெரும்பாலும் நிறைவேருமலிருப்பதால் காய்ந்தும் தீய்ந்து மேயிருக்கும்.) பாலைவனத்தில் தாகத்தைத் தீர்த்து உதவி செய்யும் தண்ணீரெனறு எண்ணும்படி கானல்நீர் இருககும. இஸ்ஸம்ஸாரத்திலும் நமக்கு வருத்தம் தீர்த்து உதவுவார போன்று, மக்கள் மனைவி வீடு நிலம் முதலியோர் தென் பட்டுக் கொண்டிருப்பர்.

இத்தகைய ஸம்ஸாரமாகிய பாலைவனததில் செய்வதின்னது செய்யத்தகாததின்னதென்னும் பகுத்தறிவில்லாமல் இங்குமங்கு முழல்கின்றேனடியேன். எப்போதும் விஷயாநுபவத்தில் ஆசை உண்டாகின்றது. அவ்வனுபவம் கிடைக்காததனால் ஒருவித வருத்தம் அடியேனைப் பீடிக்கிறது. இதனால் அடியேனுடல் இளைக்கின்றது. எதைச் செய்யும் ஆற்றலும் அடங்கி விடுகின்றது. உடல் வலிமை மனவுறுதி நோயின்மை ஆகியவை க்ஷயித்துள்ளன. அடியேனுடைய இவ்வுலக வாழ்ச்சியானது ஸுகத்துக்கன்றிக்கே கஷ்டத்துக்கே இடமாகின்றது. இங்ஙனமாக வாய்கொண்டு சொல்லித்தலைக்கட்டமுடியாத பல்வகையான துக்கங்களாலே மிகவும் தபிக்கப்பட்டிருக்கிறேனடியேன்.

உபய விபூதி நாயகனே, கருணைக்கடலே, தேவப்பெருமாளே இப்படிப் பரிதாபமடைந்துள்ள அடியேனை, இத் தாபமெல்லாமற்றுப் போகும்படி கடைக்கண்ணுல் நோக்கிச் சில்லென்ருக்க வேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று.

இரண்டாம் ச்லோகத்தில் 'விலஸந்து கடாக்ஷாஸ்தே மயி' என்றதனாலும், எட்டாம் ச்லோகத்தில் 'தவதீக்ஷணஸுதாஸிந்து வீசி விக்ஷேபசீகரை: காருண்யமாருதாநீதை: சீதலைரபிஷிஞ்சாம் மாம்' என்றதனாலும் பகவானுடைய கடாக்ஷமென்றே எல்லாவிதமான ரக்ஷணத்தையும் செய்யவல்லதாகையால், இவ்வஷ்டக ஸ்தோத்ரத்தினால் நம்பிகள் கடாக்ஷமொன்றையே தாம் பெறும் பேருகக் கருதியுள்ளமை விளங்குகின்றது.

அக்கடாக்ஷம் அவனது தயையிருந்தால்தான் கிடைக்கும். அத்தகைய தயையுடைமையை 'கருணேல்பண' (2),

தயாஸிநதோ (7) என்று குறித்தருளியுள்ளார். தயையாவது பிறரது துக்கத்தைக் கண்டு ஐயோ என்று இரங்கும் இரக்கம். இரங்குவதற்கு துக்கத்தைக் காணவேண்டுமாகையால் தமது துக்கத்தை இன்னபடிப்பட்டதேயென்று அவன் காணும்படி - நான்காம் ச்லோகம் தொடங்கி எட்டாம் ச்லோகமீறாக நன்றாக விவரித்தருளினார்.

அர்ச்சாவதாரவெம்பெருமான்களுக்குள்ளே பேரருளாளப்பெருமாளொருவரே 'ஆசாரயஸ்தோத்ரத்தை முதன்முதலில் பெற்றவர்' என்னும் பெருமை படைத்தவர். இதிலிருந்து 'அர்ச்சாவதாரத்தைப் பற்றி முதன்முதலாக ஸ்தோத்ரத்தை யருளிச் செய்தவர் திருக்கச்சி நம்பிகள் ஒருவரே' என்பது விளங்கும்.

* * *

மணவாளமாமுனிகள் அருளிய

## தேவராஜ மங்களம்

திவ்ய தேசங்களையெல்லாம் மங்களாசாஸனம் செய்துகொண்டெழுந்தருளும் க்ரமத்தில் மணவாள மாமுனிகள் காஞ்சிக்கும் எழுந்தருளிப் பெருமாளை ஸேவித்துக்கொண்டும் ஸ்ரீபாஷ்ய ப்ரவசனம் செய்து கொண்டும் நற்போதுகும் நாட்களிலே, சிஷ்யர்களின் வேண்டுகோளுக்கு உடன்பட்டுப் பேரருளாளன விஷயமான இந்த ஸ்தோத்ரத்தை அருளிச் செய்தாரென்பர் நம முன்னோர். இதன் பொருளும் சொல்லும் எல்லோர் மனங்களையும் கவரக்கூடியவை என்பது இதுதன்னை ஸேவிப்பவர்க்கு நன்கு விளங்கும்.

இதன்கண் ப்ரமதேவனது யாகத்தில் பேரருளாளன் தோன்றினானென்ற புராண வரலாறும், திருக்கச்சி நம்பிகளோடு பேரருளாளன் அன்புடன் பேசினானென்ற ஸம்ப்ரதாய வரலாறும் குறிப்பிடப்பட்டிருத்தல் காணத்தக்கது.

ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் P.B. அண்ணங்கராசார்ஸ்வாமி அருளிய உரையைப் பெரும்பாலும் பின்சென்று அடியேன் ஓர் உரையெழுதியுள்ளேன். இதில் அடியேனுடைய கவனக் குறைவு காரணமாக ஏற்பட்ட பிழைகளைப் பண்டிதர்கள் க்ஷமிக்கக் கடவர்கள் என்று விண்ணப்பித்து நிற்கிறேன்.

## ஸ்ரீதேவராஜ மங்களம்

### தனியன்

யச்சக்ரே தேவராஜஸ்ய
மங்களாசாஸனம் முதா
தம்வந்தே ரம்ய ஜாமாத்ரு
முநிம் விசத வாக்வரம்.

| | | |
|---|---|---|
| ய: | : | யாவரொருவர் |
| தேவராஜஸ்ய | : | ஸ்ரீகாஞ்சீ தேவப்பெருமாளைப் பற்றிய |
| மங்களாசாஸனம் | : | மங்களாசாஸனமென்னும் நூலை |
| முதா | : | மகிழ்ச்சியோடு |
| சக்ரே | : | அருளிச்செய்தாரோ |
| விசத வாக் வரம் | : | விளக்கமாகப்பேசும் பேச்சையுடையவர்களில் தலைவராகிய |
| தம் | : | அந்த |
| ரம்யஜாமாத்ருமுநிம் | : | அழகிய மணவாள மாமுனிகளை |
| வந்தே | : | வணங்கித் துதிக்கிறேன் |

விசதவாக்வரர் என்பது மணவாளமாமுனிகளுக்குப் பெரியோர் அளித்த பட்டப்பெயர். 'விசதவாக் சிகாமணி' என்பதும் இதுவும் ஒன்றே.

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

## தேவராஜ மங்களம்

(1)

மங்களம் வேதஸோவேதி
மேதிநீ க்ருஹமேதிநே
வரதாய தயா தாம் நே
தீரோதாராய மங்களம்.

| | | |
|---|---|---|
| வேதஸ: | : | நான்முகக் கடவுளினுடைய |
| வேதிமேதிநீ க்ருஹமேதிநே | : | உத்தரவேதியாகிய இடத்தை க்ருஹ-மாகக் கொண்டிருக்குமவனும் |
| தயாதாம்நே | : | தயைக்கு இருப்பிடமானவனும் |
| தீர உதாராய | : | அறிவும் மனவுறுதியுமுடைய கொடை-யாளியுமான |
| வரதாய | : | வரந்தரும் பெருமானுக்கு |
| மங்களம் மங்களம் | : | அதிகமான நன்மை |
| அஸ்து | : | உண்டாகுக. |

நான்முகன் செய்த வேள்விக்கு உத்ரவேதியான [illegible]ரியை இடமாகக் கொண்டு அதில் நித்யவாஸம் செய்கிறான் வரதராஜன். க்ருஹமேதீ - வீட்டில் சேர்ந்து வாழுமவன். அதுவன்றி - க்ருஹமேதீ என்பதற்கு மனைவியோடு சேர்ந்து இல்லறவாழ்வு வாழுமவன் என்ற பொருளும் உண்டென்பர் பெரியோர். அதன்படி, உத்ரவேதியாகிய இடத்தில் பெருந் தேவியோடு கூடி இல்லறவாழ்க்கை நடத்துமவன் வரதராஜன் என்றாலும் பொருந்தும்.

இப்பெருமானுக்குள்ள ஐந்து பெயர்களில் 'வரதன்' என்பது ஒன்று. வரங்களைத தருமவன் என்பது அதன் பொருள்.

தயாதாம - என்ருல் தயைக்கு இருப்பிடமென்றபடி. இதன் விளக்கமே பேரருளாளன் என்பது.

(2)

வாஜிமேதேவ்பாஹோமே
தாதுருத்தரவேதித:
உதிதாய ஹுதாதக்நே:
உதாராங்காய மங்களம்.

| | | |
|---|---|---|
| தாது: | : | நான்முகக் கடவுளின் |
| வாஜிமேதே | : | அசுவமேத யாகத்தில் |
| வபாஹோமே | : | வபையின் ஹோமம் நடந்தவளவில் |
| உத்ரவேதித: | : | உத்ரவேதியிலிருந்து |
| ஹுதாத் | : | வபஹோமம் செய்யப்பட்ட |
| அக்னே | : | அக்நியிலிருந்து |
| உதிதாய | : | உதித்தவரும் |
| உதார அங்காய | : | புகழத்தக்க திருமேனியை உடையவருமான |
| வரதாய | : | வரந்தரும் பெருமானுக்கு |
| மங்களம் | : | மங்களம் உண்டாகுக. |

வபை என்பது ஆட்டின் வயிற்றில் குடலைச் சுற்றியுள்ள ஒருவகை நிணம் என்பர். அதையெடுத்து அக்நியில் ஹோமஞ் செய்தான் பிரமதேவன். அதை யமுது செய்துகொண்டே அவ்வக்நியிலிருந்து தோன்றினான் வரதராஜனென்பது புராண வரலாறு. அதை இங்கே குறித்தருளுகிருர் மணவாள மாமுனிகள்.

உதாராங்க:- கொண்டாடத்தக்க திருமேனியை உடையவன். ஒவ்வோரவயங்களும் ஸாமுத்ரிக சாஸ்த்ரத்தில் கூறப்பட்ட லக்ஷணங்கள் பொருந்தப் பெற்றமையால் உதாராங்கன் எனப்பட்டான் பகவான்.

(3)

யஜமாநம் விதிம் வீக்ஷ்ய
ஸ்மயமாந முகச்ரியே
தயமாநத்ருசேதஸ்மை
தேவரர்ஜாய மங்களம்.

| | | |
|---|---|---|
| யஜமானம்: | : | யாகம் செய்கிற |
| விதிம் வீக்ஷ்ய | : | பிரமனைப் பார்த்து |
| ஸ்மயமான முகச்ரியே | : | சிறிதே சிரிக்கின்ற திருமுகவொளியை உடையவனும் |
| தயமான த்ருசே | : | கருணை பெய்யும் கண்களையுடையவனுமான |
| தஸ்மை தேவராஜாய | : | அந்த தேவப்பெருமானுக்கு |
| மங்களம் | : | மங்களம் உண்டாகுக. |

பகவானுடைய திருநாபிக்கமலத்திலிருந்து தோன்றிய பிரமன் பகவானுக்குப் புதல்வனாகிறான். ஆகையாலே புதல்வனாகிய பிரமதேவனிடத்தில் தகப்பனாகிய பகவானுக்கு அன்பு உண்டு. இப்போது யாகம் செய்து தன்னை அதிலிருந்து தோற்றுவித்து ஆராதித்து, அதனாலே உலகத்திலுள்ளோர் அனைவரும் தன்னை வணங்கி வழிபட்டு உய்ந்து போகும்படி செய்ததனாலே அவனை [illegible] அதனால் அப்பிரமனைக் கண்டு புன்சிரிப்பு உண்டாயிற்றும் பெருமானுக்கு. கருணை பொங்கிய திருக்கண்களாலும் அப்பிரமனைக் கடாக்ஷம் செய்தானாம் பேரருளாளன். பிரமன் நம்மைப் படைத்தால் மட்டும் போதுமா? நாம் வணங்கி வழிபட்டு உய்யும்படிக்கு ஆக, யாகம் செய்து பகவானையும் படைத்தான் பிரம்மதேவன் என்றாயிற்று.

தேவ்ராஜன் என்பது இப்பெருமானுடைய பெயர்களில் ஒன்று.

(4)

வாரிதச்யாம வபுஷே
விராஜத் பீத வாஸஸே.
வாரணசல வாஸாய
வாரிஜாக்ஷாய மங்களம்.

| | | |
|---|---|---|
| வாரித ச்யாமவபுஷே | : | மழைபொழியும் மேகம் போல் கறுத்த திருமேனியுடையவனும் |
| விராஜத் பீத வாஸஸே | : | மிக விளங்குகின்ற பொன்னிறமுள்ள ஆடையணிந்தவனும் |
| வாரணசல வாஸாய | : | ஹஸ்திகிரியில் வாஸம் செய்பவனும் |
| வாரிஜ அக்ஷாய | : | தாமரை மலர் போன்ற கண்களை உடையவனுமான |
| தேவராஜாய | : | தேவராஜனுக்கு |
| மங்களம் | : | மங்களம் உண்டாகுக. |

மேகம் போன்ற கறுத்த திருநிறத்தையுடைய பெருமானுடைய திருவரையில் பீதாம்பரம - மஞ்சள நிறப்பட்டு - பொன்னாடை சாத்தப்பட்டு விளங்குகினறது. கருநிறத்

தோடு பொன்னிறம சேர்ந்தால் பளிசசெனறு எடுததுக் காட்டச்சொல்லவேணுமோ.

வாரிஜாக்ஷன் - தாமரை மலர் போன்ற திருககண்க ளையுடையவன் பேரருளாளன. "तस्य यथा कप्यासं पुण्डरीकम् रावमक्षिणी" (சூரியனாலே மலர்ததப்பட்டதும நீரைவிட்டுப் பிரியாததும் தண்டோடு இருபபதுமான தாமரை மலர எப்படியுள்ளதோ அப்படியே சூரய மணடலத்தில நடுவில உள்ள பகவானுக் குத திருககணகள் உள்ளன.) எனறு சாநதோகயோபநிஷத்து கூறியபடியே தாமரை போன்ற கண்களையுடைமை பரமபொ ருளுக்கு லக்ஷணமென்று கருதுக.

(5)

அத்யாபி ஸர்வபூதாநாம்
அபீஷ்டபல தாயிநே
ப்ரணதார்த்திஹராயாஸ்து
ப்ரபவேமம் மங்களம்.

| | | |
|---|---|---|
| அத்யாபி: | : | இக்காலத்திலும் |
| ஸர்வ பூதாநாம் | : | எல்லா உயிர்களுக்கும |
| அபீஷ்ட பலதாயிநே | : | விரும்பிய பலனைத்தருமவனும் |
| ப்ரணத ஆர்த்தி ஹராய: | | தன்னை வணங்கியவர்களின் துன்பங்க-ளைப் போக்கடிப்பவனுமான |
| மம ப்ரபவே | : | என்னுடைய ஸவாமிக்கு |
| மங்களம் அஸ்து | : | மங்களம் உண்டாகுக. |

அன்று யாகம செயது தனனை அவதரிப்பித்த நான் முகனுக்குப் போலவே, இன்றும எல்லார்க்கும் விரும்பிய பயனைத் தந்தருளுகிறன் பேரருளாளன் என்றபடி. 'யஸ்ய ப்ரஸாத கலயா' என்று தொடங்கி ஆளவநதார் அருளியது போல, செவிடனுக்குக் கேட்குமாற்றலும், நொண்டிக்கு நடக் கும சக்தியும, ஊமைக்குப் பேசும் வலிமையும, குருடனுக்குக காணும் திறனும், மலடிக்குப பிள்ளைபபேறும மற்றும் யாவை யும் அருள செயகிறன் பெருந்தேவி மணவாளன் என்பது இங்கு நினைக்கத்தகும.

ப்ரணதார்த்திஹரன என்பது பேரருளாளனுடைய ஐந்து பெயர்களில ஒன்றாகும.

(6)

திவ்யாவயவ ஸௌந்தர்ய
திவ்யாபரண ஹேதயே

தந்தாவளகிரீசாய
தேவராஜாய மங்களம்.

| | | |
|---|---|---|
| திவ்ய | : | திவ்யமான |
| அவயவ | : | தனது அவயங்களாலே |
| ஸௌந்தர்ய | : | அழகையடைந்த |
| திவ்ய | : | திவ்யமான |
| ஆபரண | : | திருவாபரணங்களையும் |
| ஹேதயே | : | ஆயுதங்களையும் உடையனாய் |
| தந்தாவளகிரி | : | ஹஸ்திகிரி |
| ஈசாய | : | நாதனுமான |
| தேவராஜாய | : | தேவப்பெருமானுக்கு |
| மங்களம் | : | மங்களம் உண்டாகுக. |

திவ்யம் - அப்ராக்ருதம். அதாவது பகவானது திருமுகம திருமார்பு திருக்கைகள முதலிய உறுப்புக்கள இங்குள்ள பஞ்சபூதமயமானதல்லாமல பரமபதத்திலுள்ள பஞ்ச சக்தி கள் என்படுகின்ற பஞ்சபூதமயமானவை. ஆகையால மிக அழகானவை. அர்ச்சாவதார ரூபமாய சிலைகளால நிர்மிக்கப்பட்ட திருமேனியிலுள்ள உறுப்புக்களும பகவானுடைய அபிமானத்தினால் திவ்யங்கள போன்றனவேயாதலால தேவப் பெருமானுடைய உறுப்புக்கள திவ்யங்களெனப்படுவன.

ஆபரணங்களாலும் ஆயுதங்களாலும் பெருமானுடைய உறுப்புக்களுக்கு அழகுண்டாவதில்லை. நேராகப் பெருமா னுடைய உறுப்புக்களில சாத்தப்பட்டபடியால்தான ஆப ரணங்களுக்கும ஆயுதங்களுக்கும் அழகு உண்டாயிற்று என்பதாம.

(அடுத்த இதழில் முடியும்)



(தொடர் கட்டுரை)

# முமுட்சுப்படி

திரு. மாருதிதாஸன் - காஞ்சிபுரம்.

## நம: என்னும் பதத்தின் பொருள்

**மூலம் : 75**

"இனிமேல பிரணவத்தை விவரிககிறது."

**1) இதுவரை பிரணவத்தின் பொருளைக் கூறிவந்த ஆசிரியர் இனி எதனை விவரிக்கிறார்?**

பிரணவத்துக்கு மேல் உள்ள பதங்களை விவரித்துச்சொல்கிறார்.

**2) விவரித்தல் (விவரணம்) என்றால் என்ன?**

முனபு கூறிவந்த பொருளை மேலும் விரிவாகக்கூறி அதை உறுதிப்படுத்தச சிலவற்றைச் சொல்லுதலே விவரித்தல் எனப படும.

**மூலம் : 76**

"உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு; அகாரத்தை விவரிக்கிறது நாராயண பதம்; மகாரத்தை விவரிக்கிறது சதுர்த்தி; நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள்"

**1) பிரணவத்திலுள்ள எழுத்துக்கள் விளக்குவன யாவை?**

(1) 'ஆன்மா பிறருக்கு அடிமைப்பட்டதன்று' என்பதனை விளக்குகிறது உகாரம்.

பெருமானல்லாத பிற ஆன்மாககளுள் தானும் ஒரு ஆன்மாவே என்பதை உணர்ந்த சேதனன் தனக்குத் தான் அடிமை என்னும் கருத்தை நீக்குகிறது நம: என்னும் பதம். ஆகையால் நம: என்பது உகாரத்தை விளக்குகிறது.

(2) காப்பவன் பெருமான்; காக்கப்படும் பொருள்கள் சேதன அசேதனஙகள்; காததல் தொழிலைச் செய்வதற்குப் பயன்படும குணம் 'அடியவன்-தலைவன்' என்னும் தொடர்பு, அவரவர் தகுதிககேற்பக் காக்கும் திறன் ஆகிய இவை அனைத்தையும் தெளிவாக விளக்குவதால அகாரததை நாராயண பதம் விளககுகிறது.

(3) பகவத் கைஙகர்யம் (அடிமைத்தொழில்) செய்யாத போது அடிமைத்தனமை (சேஷத்வம்) இல்லையாதலின் அதைக் குறிக்கும் சதுர்த்தியோ, அல்லது நித்தியப் பொருள்களைக குறிக்கும் 'நார' பதமோ மகாரத்தை விளக்குவதாகும்.



மூலம் : 77

"அடைவே விவரியாதொழிகிறது, விரோதி போய் அநுபவிக்க வேண்டுகையாலே' '

1) பிரணவத்தில் உள்ள எழுத்துகளை வரிசையாக விவரிக்காமல் வரிசை மாற்றி விவரிப்பானேன்?

மூலம் 76ல் அகாரத்தை முதலில் விவரிக்காமல் உகாரத்தையே விவரிக்கிறார்.

ஏனெனின், பகவத் அனுபவத்திற்குப் பகையாய் உள்ள அகங்கார மமகாரங்கள் கழிந்தால் தான் பகவத் அநுபவம் கிடைக்கும்.

அகங்கார மமகாரங்கள் நம என்னும் பதத்தாலே கழிக்கப்படுகிறது. நம: என்னும் பதத்தினை உகாரம் - சுட்டுகிறது. எனவேதான், அகாரத்தை முதலில் கூறாமல் உகாரத்தினை முதலில் கூறுகிறார்.

2) 75 முதல் 77 வரையுள்ள மூலங்களின் பொருள்களைத் தொகுத்து வரைக.

இனி, பிரணவத்தை விவரிக்கிறது. உகாரத்தை நமப்பதமும், அகாரத்தை நாராயண பதமும், மகாரத்தைச் சதுர்த்தியும் நார பதமும் விரிவுபடுத்துகின்றன. அகாரத்தை முன்னும், உகாரத்தைப் பின்னும் விளக்க வேண்டியிருப்பினும், அங்ஙனம் விளக்காததற்குக் காரணம் அகங்கார மமகாரங்கள் நீங்கிய பின்பே பகவானை அனுபவிக்கவேண்டியிருக்கிறது என்பதனாலேயே எனப்படும் செய்திகள் 75 முதல 75 வரையுள்ள மூலங்களில சொல்லப்பட்டுள்ளன.

மூலம் : 78

"நமஸ்ஸு - 'ந' என்றும் 'ம:' என்றும் இரண்டு பதம்"

1) பிரணவத்தின் நடுப்பதமான நம: என்பதனைப் பிரித்துக்காட்டுக.

நம: என்பதில் 'ந', 'ம:' என்னும் இரண்டு எழுத்துகள் உள்ளன. இவ்விரண்டு எழுத்துகள் தனித்தனி பொருளைத் தரும் லாவ பதங்கள் எனப்பட்டன.

மூலம் : 79

"ம: என்கிற வித்தால், தனக்கு உரியன் என்கிறது; ந என்று அத்தைத் தவிர்க்கிறது."

1) ந, ம: என்னும் இரண்டு பதங்களுக்கும் பொருள்கள் யாவை?

ம: என்னும் பதம் 'தனக்குத் தான் உரியன்' என்று பொருள் தரும். ஆனால், ந என்னும் பதமோ அதற்கு எதிர்மறைப் பொருளைத் தந்து 'தனக்குத் தான் உரியன் அல்லன்' என்று பொருள்தரும்.

மூலம் : 80

"ஆக, நம. என்கிற வித்தால், தனக்குரியன் அன்றென்கிறது."

1) நம: என்னும் தொடர்மொழி உணர்த்தும் பொருள் யாது?

சேதனன் 'தனக்குத்தான் உரியவன் அல்லன்' என்னும் பொருளை நம: என்னும் தொடர்மொழி உணர்த்துகிறது.

மூலம் : 81

"பிறருக்குரியனானவன்று தன் வைலக்ஷண்யத்தைக் காட்டி மீட்கலாம்; தனக்கென்னுமன்று யோக்கியதையுங்கூட அழியும்."

1) சேதனன் தனக்குத்தானும் உரியவனல்லன்; பிறருக்கும் உரியவன் அல்லன் என்பதனை உகாரம் தெரிவிக்கிறது என்பதனை அறிந்தோம். இவ்விரு பொருள்களுள் தனக்குத்தான் உரியவன் அல்லன் என்பதனை மட்டும் விளக்கிக் கூறுவானேன்?

'தான பிறருக்கு அடிமை', 'தான தனக்கு அடிமை' என்னும் இவ்விரண்டையும ஒப்பிட்டு நோக்குங்கால், தான் பிறருக்கு அடிமை என்று எண்ணுவதைக் காட்டிலும் தான் தனக்கு உரியன் என்னும் சுதந்தர உணர்வு மிகுந்த தீமையை விளைவிக்கும்.

ஏனெனின், பிறருக்கு அடிமை பூண்டொழுகும் ஒருவன் ஏதோ ஒரு வகையில் பிறருக்கு அடியவனாக உள்ளான். அவ்வாறு பிறருக்கு அடிமையாய் இருக்கும் ஒருவனைத் தகுந்த காரணங்கள் காட்டி அவ்வடிமை நிலையிலிருந்து அவனை மீட்கலாம்.

காரணத்தன்மை, காப்பாற்றும் தன்மை, தலைமைத்தன்மை ஆகியவை வாய்க்கப்பெற்ற பகவானுடைய சீரிய குணங்களை எடுத்துக்காட்டி, அவனைப் பிறருக்கு அடிமை செய்யும் நிலையிலிருந்து பகவானுக்குக் கைங்கர்யம் செய்யும் அடிமை நிலைக்குத் திருப்புதல் எளிதாக முடியும். அவனும் பகவத் கைங்கர்யத்தின் பெருமையை உணர்ந்து தொண்டு செய்வதில் ஈடுபடுவான்.

ஆனால், "நான் சுதந்தரன் எவருக்கும் அடிமைப்பட்டவன் அல்லன்" என்று இறுமாந்து நிற்கும் ஒருவனை எந்தக் காரணத்தைக் காட்டியும் பகவத் கைங்கர்யத்தில் ஈடுபடச்செய்வது அரிதினும் அரிதாம்.

எனவேதான், 'சேதனன் தனக்குத்தான் உரியன் அல்லன்' என்

னும பொருளை படடிய முக கியமாக விளக்குகிறார்.

2) இக்கருத்தினை விளக்கச் சான்று ஒன்று தருக.

அகளங்க சோழன எனப வன உறையூரைத் தலைநகரா கக கொண்டு சோழநாட்டை ஆணடு வநதான. அமமனன னுககுக கையாள்களாக வில் லியரமூவர இருந்தனர. அம மூவருள் ஒருவர உறங்காவில்லி என்பவர்.

ஒரு நாள், உறங்காவில்லி உறையூரிலிருந்து திருவெள் ளறை என்னும் தலத்துக் குத் தன் பத்தினியுடன சென்று கொண்டிருந்தான். அவளோ மிகப்பேரழகி! உச்சி வெயில் நேரத்தில் காவிரி மணலில் இரு வரும் நடந்து சென்றனர். சுடுமணலில் வெப்பம் தாளாது வில்லியின் பத்தினி பெரிதும் வருந்தினாள். அவள் பாதங் கள் வெப்பத்தால் கொப்பளித் தன. இதைக் கண்டு வில்லி பெரிதும் வருந்தினான். அரச னால் தனக்கு வெகுமதியாகக் கொடுக்கப்பட்ட பட்டாடையை மணலில் விரித்தான். அப்பாட் டாடை மீது தன் மனைவியை நடந்து வருமாறு செய்தான். அவள் தலைமேல் வெயில் படாமல் இருக்கக் குடையும் பிடித்து வநதான்.

இந்தப் புதுமையைக காவிரிக் கரையில் இருந்த இராமாநுசர் கண்டார். அவர்கள் இருவரை யும தம் அருகே அழைத்து விசாரிககலானார்.

"சுவாமி! அடியேன் திரு வெளளறையைச் சேரந்தவன. உறையூரில் சோழ மனனனிடம தொழில் செயது வருகிறேன். இபபோது திருவெள்ளறைக்குச் சென்று கொணடிருககிறேன்" என்று வில்லி கூறினான்.

"தொழில செய்யப்போகும் போது மனைவியையும் கூடவே அழைத்துச் சென்றதேன்?" என்று இராமாநுசர் வினவி னார்.

"சுவாமி! எவ்விடத்தும் காண முடியாத இப்பேரழகி யைப் பிரிந்து செலல என் மனம் வரவில்லையே! என்ன செய்வது?" என்றான் வில்லி.

"அப்படியாயின் இவளைக் காட்டிலும் ஒப்பற்ற பேரழகு டைய பொருளைக் கண்டால், அப்பொருளில் உன் மனம் ஈடு படுமா?" என்று உடையவர் கேட்டார்.

"ஈடுபடும்!" என்றான் வில்லி.

இராமாநுசர் வில்லியை அழைத்துக் கொண்டு திருவ ரங்கப்பெருமானின் திருக்கோ யிலுக்குச் சென்றார்; புன்னகை தவழும் முகத்துடன் பள்ளி கொண்டிருக்கும் திருவரங்கப்பெ ருமானின் திவ்ய மங்கள விக் ரகத்தைக் காணுமாறு அருள் புரிந்தார்!

திருவரங்கப் பெருமானை சேவித்த அளவில் வில்லியும், அவர்தம் பத்தினியும், தம் மையே மறந்து நின்றனர். கண் ணிமைக்காமல் அக்கரியவனின் வனப்பில் கண்களைப் பதித்து நின்றனர்; திருவடி முதல் திரு முடி வரையிலும், திருமுடியி லிருந்து திருவடி வரையிலும் மாறி மாறிச் சேவித்து மனங் குளிர்ந்தனர்.

திருவரஙகபபெருமானின் திரு வருளுக்கு ஆளாக்கிய இராமா நுசரின திருவடிகளில வீழநது வணஙகினான விலலி. அவன மனம் தன் மனைவியின் பேர ழகை மறந்து திருவரங்கப் பெருமானின் பேரழகில் ஒன் றியது. அப்பெருமானுக்கே அடிமை செய்து வாழ வில்லி உறுதி பூண்டான்.

அன்று முதல் இவர்களுக்கு முறையே பிள்ளை உறங்காவில லிதாசர் என்றும், பொன்னாச் சியார் என்றும் திருநாமமிட்டு இவர்களை அன்புடன் இராமா நுசர் ஆதரித்து வரலானார்.

பிறருக்கு அடிமையாய் இருக் கும் ஒருவன் ஆண்டவனுக்கு அடிமையாவது என்பது எளிது என்பதனை இவ்வரலாற் றால் நன்கு உணரலாம்.

மூலம் : 82

"இத்தால் விரோதியைக் கழிக் கிறது."

1) நமஸஸால் உண்டாகும் பயன் யாது?

இந்த நம: என்பது விரோ தியை நீக்குகிறது.

மூலம் : 83

"விரோதிதான் மூன்று."

1) விரோதிகள் எத்தனை வகைப்படும்?

விரோதிகள் மூன்று வகைப் படும்.

மூலம் : 84

"அதாவது ஸ்வரூப விரோ தியும், உபாய விரோதியும், ப்ராப்ய விரோதியும்.",

1) மூவகை விரோதிகள் யாவை?

சொரூப விரோதி,. உபாய விரோதி, ப்ராப்ய விரோதி என் பவை மூவகை விரோதிகளாம்.

2) சொரூப விரோதி என்றால் என்ன?

ஓம் எனும் பிரணவத்தில் பகவானுக்கு மட்டுமே அடிமைப்பட்டிருப்பதே ஆன்ம சொரூபம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஆன்ம சொரூபத்துக்கு விரோதியே சொரூப விரோதி எனப்படும்.

அதாவது, அடிமைத் தன்மை என்னும் சொரூபத்துக்கு அகங்கார மமகாரங்கள் விரோதிகளாம்.

3) உபாய விரோதி என்றால் என்ன?

நம: என்னும் பதத்தில் கிடைத்த பொருளாகிய உபாயத்திற்கு விரோதியாய் உள்ளது உபாய விரோதி எனப்படும்.

4) ப்ராப்ய விரோதி என்றால் என்ன?

நாராயண என்னும் பதத்தில் சொல்லப்படும் பலனுக்கு விரோதியாய் உள்ளது ப்ராப்ய விரோதி எனப்படும்.

ப்ராப்யம், உபேயம், பலன், புருஷார்த்தம் இவை ஒரு பொருள் சொற்கள்.

மூலம் : 85

"ஸ்வரூப விரோதி கழிகை யாவது - 'யாநீ என்னுடைமையும் நீயே' என்றிருக்கை; உபாய விரோதி கழிகையாவது - 'களைவாய் துன்பம் களையாதொழிவாய்' என்றிருக்கை; ப்ராப்ய விரோதி கழிகையாவது - 'மற்றை நம் காமங்கள் மாற்று;' என்றிருக்கை."

1) கழிகை என்றால் என்ன?

நீங்குதல் என்பது பொருளாம்.

2) இம்மூலம் கூறுவது யாது?

மூன்று விரோதிகளும் நீங்குதலுக்குரிய வழிகளைக் கூறுகிறது.

3) சொரூப விரோதி கழிகை என்பதனை விளக்குக.

இறைவனுக்கு மட்டுமே தொண்டு செய்யும் தன்மையைத்தான் ஆன்ம சொரூபம் என்பர்.

இத்தொண்டு செய்யும் தன்மைக்கு விரோதியாவது, 'யான் எனக்கு உரியன்' என்று நினைக்கும் அகங்காரமும், 'இப்பொருள் என்னுடையது' என்று எண்ணும் மமகாரமும் ஆகும்.

இவ்விரண்டும் நீங்கப் பெறுதலே சொரூப விரோதி கழிகை.

"யானேநீ; என்னுடைமையும் நீயே" என்பது ஆழ்வார் வாக்கு. இதில் "யானே நீ" என்பதற்கு யான் நீயே என்று பொருள் கொள்ள வேண்டும். அப்படிப்பொருள் கொண்டால், நான் பகவானுக்கே உரிமையுடையவன் என்னும் பொருள் கிடைக்கும்.

"என்னுடைமையும் நீயே" என்பதற்கு என்னுடைமைகளும் பகவானுக்கே உரிமையுடையவை என்பது பொருளாகும்.

இவ்வாறு எண்ணுதலே சொரூப விரோதி கழிகையாகும்.

4) உபாய விரோதி கழிகை என்பதனை விளக்குக.

உபாயம் என்பது பகவானைக் குறிக்கும். பகவானையே பற்றி நிற்றலுக்குப் பகையாய் உள்ளவையே உபாய விரோதி எனப்படும். "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்று பகவானையே பற்றி நிற்பது உபாய விரோதி நீங்குதல் எனப்படும்.

"உனக்குப் பணிசெய்திருக்கும் தவமுடையேன் இனிப்போய் ஒருவன் தனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கை நின் சாயை அழிவு கண்டாய்" என்று பெரியாழ்வார் அருளிச்செய்தபடி, 'வேறொருவன் மனையைத் தேடிச் செல்வேன் அல்லேன்' என்றிருத்தலே உபாயவிரோதி நீங்கிய நிலையாம்.

5) ப்ராப்ய விரோதி கழிகை என்பதனை விளக்குக

"மற்றை நம் காமங்கள் மாற்று" என்று இருத்தலே ப்ராப்ய விரோதி கழிகையாம்.

பிராப்பியம் என்பது பகவானுக்குக் கைங்கர்யம் செய்யும் பொழுது அவன் உவப்பிற்கு ஏற்பச் செய்தலாம்.

பிராப்பியத்துக்கு விரோதியாவது, பகவானுக்குச் செய்யும் தொண்டினைத் தனக்கு இன்பமூட்டுதற் பொருட்டுச் செய்தலாம்.

பிராப்பிய விரோதி கழிகையாவது, "மற்றைநம் காமங்கள் மாற்று" என்னும் ஆண்டாள் பாசுரத்தின்படி, பகவானுடைய உவப்பிறகு மாறாக உள்ள விருப்பங்களைப் போக்க வேண்டும் என்று ஆண்டவனை வேண்டியிருத்தலாம்.

நிலா, தென்றல், மலர், சந்தனம் முதலானவை பிறருக்குப் பயன்படுங்கால் தமக்குப் பயனேதும் இல்லாதிருத்தல் போன்று, தன்னலமின்றிப் பகவத் கைங்கர்யம் செய்தல் வேண்டும்.

தன்னலமற்ற நிலையில் செய்யப்படும் கைங்கர்யமே உபேய விரோதி கழிகை எனப்படும்.

மூலம் : 86

"ம: என்கை ஸ்வரூப நாசம்; நம; என்கை ஸ்வரூபோஜ்ஜீவனம்."

1) சொரூப நாசம் என்றால் என்ன?

சீவான்மாவின் அழிவே சொரூபநாசம் எனப்படும். சீவான்மா முக்காலத்தும் அழிவற்ற பொருளே! எனினும், சீவான்மாவின் அழிவே சொரூப நாசம் என்பது எப்படிப் பொருந்தும் எனில்,

பொருள் வளம் படைத்த கோடீசுவரன் ஒருவன் முன்னிலையில் ஏழை ஒருவன் இருந்தால், அந்த ஏழையை ஏதும் இல்லாதவனாகவே அனைவரும் மதிப்பர். உயிருடன் இருப்பினும் அவன் பிணத்துக்குச் சமமே!

அதுபோலவே, ஆன்மாவானது பரமான்மாவின் தொடர்பு இல்லாத போது அந்த ஆன்மா இருப்பினும் இல்லாததாகவே கருதப்படும். அதுவே சொரூபநாசம் எனப்படுகிறது.

பரமாத்மாவின் தொடர்பு இல்லாத நிலையில் ஆன்மா அழிவையே அடைகிறது. அந்த அழிவைத்தான் சொரூபநாசம் என்கின்றனர்.

2) 'ம: என்கை சொரூப நாசம்' என்பதனை விளக்குக.

பரமான்மாவின் தொடர்பை அகற்றுவதற்குக் காரணமாய் உள்ளவை நான் என்னும் அகங்காரமும், எனது என்னும் மமகாரமும் ஆம். இவ்வகையில் ஆன்மாவின் சொரூப நாசத்திற்குக் காரணமாயுள்ளவை இவ்வகங்கார மமகாரங்களே என்பது தெளிவாகிறது.

அகங்கார மமகாரங்களைக் குறிக்கும் சொல் ம: என்பது. எனவே, "ம: என்கை சொரூபநாசம்" என்கிறார் ஆசிரியர்.

சீவனுடைய அழிவையும், அவ்வழிவுக்குக் காரணமான அகங்கார மமகாரங்களையும் தெரிவிப்பது ம: என்னும் சொல்லே ஆகும். எனவே, 'ம:' என்னும் சொல்லும், சொரூபநாசம் என்பதும் ஒன்றே என்பது தெளிவு.

3) 'நம: என்கை சொரூப உஜ்ஜீவனம்' என்பதனை விளக்குக.

நான் என்னும் அகங்காரமும், எனது என்னும் மமகாரமும் அற்ற நிலையே நம: என்பது. அகங்கார மமகாரங்கள் அற்ற நிலையிலேயே ஆன்மாவுக்கு வாழ்வு கிடைக்கிறது என்பதனையே, "நம: என்கை சொரூப உஜ்ஜீவனம்" என்கிறார் ஆசிரியர்.

மூலம் : 87

"இதுதான்... ஸ்வரூபத்தையும், உபாயத்தையும், பலத்தையும் காட்டும்."

1) இந்த நமப்பதம் வேறு எவற்றை விளக்கும்?

சொரூபம், உபாயம், பயன் என்பனவற்றுக்குப் பகைகளாகிற அகங்கார மமகாரங்களை நீக்குதல் மட்டுமின்றிப் பகவத் கைங்கர்யம், பகவானாகிற உபேயம், பகவானின் உவப்புககெனவே செய்யப்படும் கைங்கர்யமாகிய பலன் ஆகியவற்றையும் இந்த நமப்பதம் விளக்கிக்காட்டும்.

(தொடரும்)



ஆகாச ராஜனின் மகளான ஸ்ரீபத்மாவதியை ஏழுமலையான் திருமணம் செய்து கொண்ட புனிதத்தலமாகக் கருதப்படுவது நாராயணவனம் எனும் சிற்றூராகும். இத்தலம் திருப்பதி - சென்னை பேருந்து வழியில் புத்தூருக்கு 5 கி.மீ. தூரத்தில் உள்ளது. இறைவனின் திருமணம் நடைபெற்ற இத்திருத்தலத்தில் தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி திருக்கோயில் உள்ளது. தற்போது இக்கோயிலில் இறைவனுக்குப் பக்தர்கள் சார்பில் திருமணம் செய்யும் வகையில் மேலாண்மை 'கல்யாணோத்ஸவம்' எனும் ஆர்ஜித சேவையை அண்மையில் புகுத்தியுள்ளது. உத்ஸவம் ஒன்றிற்கு ரூ. 300/- செலுத்திப் பக்தர்கள் இக்கல்யாணோத்ஸவ சேவையில் பங்கேற்கலாம். இத்தொகையினை "Executive Officer, T.T.D., Tirupati." எனும் பெயரில் வங்கி காசோலை மூலமாகச் செலுத்தி, அதனை 'கோயில் மேற்பார்வையாளர், ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி திருக்கோயில், நாராயணவனம், புத்தூர் தாலுகா, சித்தூர் மாவட்டம் ஆ.பி.' எனும் முகவரிக்கு, உத்ஸவம் யார் பெயரில் எந்த தேதியில் நடத்த வேண்டும் என்ற தவகல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) காலக்கிரமத்தில் அனுப்புதல் வேண்டும். கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள் அனுமதிக்கப்படுவர். கோயில் வளாகத்திலுள்ள அலுவலகத்தில் ஒரு நாள்முன்கூட்டியே நேரிடையாக தொகை செலுத்தியும், உத்ஸவத்தில் பங்கேற்கலாம்.

# இதிகாசங்களில் கல்விக் கொள்கைகள்

டாக்டர். எல். வீரராகவன் - மதுரை.

ஸம்ஸ்க்ருத மொழிக்காலத்தை வேதகாலம், இதிகாசகாலம், இலக்கியக் காலம் என மூவகையாகப் பிரிப்பர். இதில் முதலிரண்டு காலங்களில் காணப்படும் கல்வியின் நிலைபற்றி ஓரளவு காண்போம்.

## வேதகாலம் :

இக்காலத்தில் குருவிடமிருந்து மாணவனுக்கு நேரிடையாகப் பயிற்சி கிட்டியது. வேதங்களை அதன் ஒலி, மாத்திரை முதலியன குறையாதும், அதிகரிக்காதும் கற்றுத தங்கள் மாணவர்களுக்கும் அவ்வாறே கற்பித்தனர். இதனைத் தற்காலத்தில் காணப்படும் Formal System எனக் கூறலாம். ஆனால் இதற்கான பாடத்திட்டம் எதுவும் கிடையாது. எட்டு வயது முடிந்த பின்னர் மாணவன் ஆசிரியரிடத்து அழைத்துச் செல்லப்பட்டு குருகுலத்தில் சேர்க்கப்படுகிறுன். கல்வி முடிந்த பின்னரே வீட்டிற்கு அனுப்பப்பட்டு இல்லறத்தில் ஈடுபடுகிறுன். ஆசிரியர் தினமும் தனக்கு விருப்பமான நேரங்களிலும் குறிப்பாக விடியற்காலை வேளைகளிலும் போதிப்பார். விடுமுறை நாட்களிலுமகூட மாணவன் குருகுலத்திலேயே இருந்து வருவான். மாணவன் கற்றுவந்தபின் அவன் கல்வித்தரம் சோதித்தறியப்பட்டது. இக்காலத்தில் பெண்களும் கல்வியில் ஆர்வம் காட்டியிருந்தனர் என்பது கார்க்கி எனும் பெண்மணியின் நுண்ணிய கேள்விக் கணைகளால் அறிய இயலும்.

## கல்வியின் நோக்கம் :

இக்காலத்தில் கல்வியின் நோக்கம் மோட்சம் அடைவதும் அதை அடைவதற்கு வழியாகக் கருதப்பட்ட யாகங்களைச் செய்வதற்கான முறைகளை அறிதலும், இவ்வுலக வாழ்விற்குரியதும் அமைதியான வாழ்க்கையை நடத்துவதற்கான பண்பைப் பெறுவதும் ஆகும்.

## ஆசிரியரின் நிலை :

"குருர் பிரம்மா குருர் விஷ்ணு:
குருர் தேவோ மஹேஸ்வர।
குரு: சாக்ஷாத் பரம் ப்ருஹ்ம
தஸ்மை ஸ்ரீகுரவே நம: ।।

எழுத்தறிவித்தவன் இறைவனாகக் கருதப்பட்டான். படைக்கும் நான்முகனாகவும், காக்கும் நாரணனாகவும், சகலத்தையும் அழிக்கும் சங்கரனாகவும் கருதப்பட்ட குரு அதற்கும் மேம்பட்ட நிலையில் உள்ள பரம் பிரம்மத்திற்கு இணையாகக் கருதப்பட்டார். आज्ञा गुरूणां हि अविचारणीया" குருவின் கட்டளை சோதிக்கத் தக்கதல்ல என்பதே அன்றைய நிலை. ஆருணி மற்றும் ஏனைய மாணவர்களின் கதைகள் அந்நாளைய குருபக்திக்குச் சான்றுகளாகும்.

## இதிகாச காலம் :

இராமாயணமும், மகாபாரதமும் இதிகாசங்கள் எனப்படுவன. இவற்றில் இராமாயணம் காலத்தால் முந்தியது என்பர். இராமாயணம் ஸம்ஸ்கருத மொழியின் முதல் இலக்கிய நூல். இதை "ஆதிகாவ்யம்" என்பர். இந்நூலில் இராமன் கல்வி பயின்றதைப் பற்றிய நேரிடையான செய்திகள் ஏதுமில்லை. ஆனால் அவர் விசுவாமித்திர முனிவருடன் சென்ற பொழுது வழி நடத்தலின் கடுமை தோன்றுவண்ணம் பலை, அதிபலை எனும் இரண்டு மந்திரங்களையும், உயர்ந்த அஸ்த்ரங்களை உபயோகிக்கும் முறைகளையும் கற்றதாகக் காணப்படுகிறது. இதைக் கல்வியின் தொடர்ச்சியாகக் கூறலாம்.

தற்காலத்தில் கல்விச் சுற்றுலா மூலம் அறிவை வளர்த்துக் கொள்வதுபோல் விசுவாமித்ர முனிவர் தன்னுடன் வரும் இராமனுக்கும், இலக்குவனுக்கும் வழியே காணப்பட்ட ஆறுகள், நகரங்கள் முதலியனவற்றின் தோற்றம், வளர்ச்சி, அழிவு பற்றி விவரிக்கின்றுர். கிட்கிந்தா காண்டத்தில், இராம இலக்குவர்களைக் கண்டு அநுமன் தான் சுக்ரீவனின் அமைச்சன், அரசன் சுக்ரீவன் இராமனிடத்தே நட்பைக் கோருகிறுன் எனறு கூறுகின்றுன். அதைக் கேட்ட இராமன் இலக்குவனிடத்துக் கூறினான. "இவனிடம் பேசு, இவன் பேசும் கலையை அறிந்தவன். वाक्यज्ञः (கிட் 3/28, 29, 30). சொல்லின் செல்வன். இருக்கு, யசுர், சாம வேதங்களில் மிகவும் திறமை பெற்றவனால்கூட இங்ஙனம் பேச

வியலாது. இவனால் இலக்கண நூலாகிய வியாகரணம் பன்முறை கேட்கப்பட்டிருக்க வேண்டும். இவன் பேச்சில் எந்தக் குற்றமும் காணவியலவில்லை பார்" என்கிறான். மேலும் 'नवव्याकरणपण्डितः' ஒன்பது வகையான இலக்கண நூல்களையும் அறிந்தவன் என்றும் கூறப்படுகின்றான். வேதத்தின் பகுதிகளாகக் கருதப்படுவன சிக்ஷா, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் ஆகிய ஆறுமாகும். எனவே வேதப் பகுதிகளுள் ஒன்றான வியாகரணம் கற்பிக்கப்பட்டு இருப்பதால் ஏனைய ஐந்து பகுதிகளும் கற்பிக்கப்பட்டிருக்கக் கூடும். ஜாம்பவான் அநுமனை விளிக்கும் பொழுது "ஸர்வ சாஸ்த்ர விசாரத", "எல்லா சாத்திரங்களையும் நன்குணரந்தவனே" என்று கூறுவதைக் காண்கிறோம். எனவே எல்லா சாஸ்த்ரங்களும் கற்பிக்கப்பட்டிருத்தல் கூடும் என அறியலாம். சீதையும் அநுமனை प्राज्ञः என்றும் "புத்திமதாம் வரிஷ்ட:" 'அறிவாளிகளுள் சிறந்தவனே' எனக் கொண்டாடுகின்றாள். இக்காலத்தில் தர்க்க சாத்திரத்தின் மேன்மையையும் காணலாம். இராமன், தசரதன் இறந்த பின்னர் பரதனால் வேண்டப்பட்டும் நாடு திரும்பமாட்டேன் என்று கூறியபொழுது இராமனின் மனதைத் திருப்ப நாத்திக வாதமும் கையாளப்பட்டதைக் காண்கிறோம். அநுமன் சீதையுடன் பேச முயலும் பொழுது தீவிரமாகச் சிந்திக்கிறான். "நானோ குரங்கு. இராவணனின் இருப்பிடத்தில் இருக்கும் சீதையிடத்து ஸம்ஸ்க்ருத மொழியில் பேசினால் என்னை இராவணன் என நினைத்து பயப்படுவாள். இவளிடத்தே பேசாமல் திரும்பிச் சென்று இராமனிடத்துச் சென்று என்ன செய்தி சொல்லுவேன். தன்னைத் தேற்றுவார் இன்மையால் சீதை மனமொடிந்து மடியக்கூடும். என்ன செய்யலாம்" என யோசித்துப் பின்னர் இராமனின் கதையைப் பாட ஆரம்பிக்கின்றார். எனவே ஒரு செயலைத் தொடங்கு முன்னர் நன்கு சிந்தித்துச் செயல்படுவதைக் காணலாம். சீதையும், அநுமனால் கூறப்பட்ட இராம கதையைச் செவிமடுத்துச் சிந்திக்கிறாள்: "இராவணனின் இருப்பிடத்தில் இராம கதை எவ்வாறு? இது என் தூக்கத்தில் தோன்றிய கனவோ! என்னே என் துரதிருஷ்டம். கனவில்கூட இராமனைக் காணவியலவில்லையே! ஒரு குரங்கையல்லவா காண்கிறேன். கனவில் குரங்கைக்கண்டால் உறவினர்களுக்குத் தொல்லை உண்டாகுமே! என் இராமன் மற்றும் என் தந்தை மற்றும் அனைவரும் நலமுடன் வாழ இறைவா அருள்வாய்" என வேண்டிக் கொள்கிறாள். இதனால் கனவுகள், அதன் பலன்கள் மற்றும் அறியப்பட்டிருந்தன என்பது சீதையின் மொழியாலும், திரிசடை என்பவள் தன் கனவைக்கூறி அதனால் ஏற்படும் பலன்களைக் கூறுவதாலும் அறிகிறோம். மேலும் சீதை 'நான் தூங்கினால் அல்லவா கனவு காணஇயலும். எனவே இது கனவல்ல. ஏதோ அரக்கனின் மாயையாகத்தான் இருக்கும்' என சிந்தித்துக் கடைசியில் இவன் இராவணனே என எண்ணுகிறாள். இதனால் தர்க்கித்து முடிவெடுத்தலைப் பெண்களிடமும் காண்பதால் இக்காலத்தில் பெண்களும் கல்வியில் மேம்பட்டிருத்தல் கூடும். மந்தோதரி, தாரையின் புலம்பல்கள் இதற்குச் சான்றாகும். மேலும் கல்விச் செல்வம் யாரிடத்து இருந்தாலும் கொள்ளப்பட்டது. இராவணன் இராம பாணத்தால் துளைக்கப்பட்டு மண்ணில் வீழ்ந்திருந்த போது இராமன் இலக்குவனை அனுப்பி அரசநெறிகளைக் கற்கச் சொல்வதைக் காண்கிறோம்.

மகாபாரதத்தில் அரசகுமாரர்கள் குருகுலம் சென்று கல்வி பயின்றதைக் காண்கிறோம். வறிய துரோணரும், வல்லரசன் குமாரன் துருபதனும் ஒரு குருகுலத்தில் கற்றதும், ஏழ்மையின் இதயவாசல் குசேலனும், யாதவகுல திலகன் கண்ணனும் ஒரே குருகுலத்தில் சாந்தீபினி முனிவரிடத்துக் கல்வி கற்றதும் காணப்படுகின்றன. இதிகாச காலத்தில் கல்வி சஸ்த்ர வித்யை, சாஸ்த்ர வித்யை என இருவகையாகக் காணப்பட்டது. சஸ்த்ர வித்யையில் ஆயுதங்களைக் கையாளும் முறைகளும், அதிதனிலும் மேம்பட்ட நிலையான "அஸ்த்ர வித்யை" ஆயுதங்களை மந்திரங்களுடன் கையாளும் முறையைக் கற்பதும் செவ்வனே கற்பிக்கப்பட்டன. சாஸ்த்ர வித்யை என்பதன் மூலம் அரசை நடத்திச் செல்வதற்குத் தேவையான தர்ம சாஸ்த்ரம் ராஜநீதி முதலியன கற்பிக்கப்பட்டன. குருவம்சத்தைச் சார்ந்த விதுரரால் கூறப்பட்ட நீதிகள் 'விதுர நீதி' என்று கொண்டாடப்படுகிறது. போர்க்களத்தில் அம்புப் படுக்கையில் கிடந்தவாறு தருமனுக்கு பீஷ்ம பிதாமஹர் அரச தர்மங்களை எடுத்துரைத்ததைக் காணலாம். எல்லாவற்றிற்கும் மேலாக அழிவை உண்டு பண்ண ஒன்றுகூடிய போர்க்களத்தின் நடுவே ஆன்மாவை

அறிவிக்கும் பகவத்கீதை மலர்ந்தது. இவையனைத்தும் கல்வி கற்கும் நிலையைக் கடந்த பின்னும் மாணவன் கற்றவந்தமைக்குச் சான்றாகும்.

இக்காலத்தில் ஆசிரியரின் நிலை யாது? ஞான ஒளியால் ஒளிவிளக்கேற்றி மன இருளைப் போக்கிய ஆசிரியர்களின் உயர்ந்த கௌரவம் காப்பாற்றப்பட்டு வந்தது. ஆசிரியர், மாணவர்களிடத்தே அன்பு, நட்பு காணப்பட்டது. பார்த்தன் குருவின் ஆணைப்படி துருபதனைச் சிறைப்பிடித்ததும், தனக்கு நேரிடையான குருவாக இல்லாத போதும் துரோணரின் கட்டளைப்படி ஏகலைவன் தன் கட்டை விரலை ஈந்ததும், கண்ணன் குருபத்னியின் சொற்படி மறைந்த குழந்தைகளை மீட்டதும், இராமன் விசுவாமித்ரரின் ஆணைப்படி தாடகையைக் கொன்றதும், அவர் ஆணை பெற்ற பின்னரே சீதையின் சுயம்வரத்திற்காக வைக்கப்பட்ட வில்லை நாணேற்றியதும் குறிப்பிடத்தக்கன. ✤



ஏடகநாதர் கோயில் - திருவேடகம்

# இறைவனோடு இணக்கம்

சாதகன் இறைவனோடு கொள்கிற இணக்கம் பலதரப்பட்டது. அவையாவன.

சாந்த பாவனை : கடவுள் மெய்ப்பொருள் என்று அவரிடத்து ஆழ்ந்த இணக்கம் வைப்பது இது. பழங்காலத்து ரிஷிகள் இம்முறையைக் கையாண்டனர்.

தாஸ்ய பாவனை : ஆண்டான் அடிமை இணக்கம் என்பது இதுவே. ஸ்ரீராமனிடத்து ஹனுமான் இத்தகைய இணக்கம் கொண்டிருந்தார்.

சக்ய பாவனை : சக்யம் என்பது தோழமை. குசேலர் போன்ற கிருஷ்ணனுடைய தோழர்கள் தாங்கள் அருந்தி எச்சில் பட்டதையும் கிருஷ்ணனுக்கு வழங்கினர். கிருஷ்ணன் தோள் மீதும் ஏறி உரிமைப் பாராட்டினர்.

வாத்சல்ய பாவனை : வாத்சல்யம் என்பது சேயினிடத்து தாய் கொண்டுள்ள இணக்கம். யசோதை கிருஷ்ணனை பரமாத்மனாகக் கருதவில்லை. தன் குழந்தை என்றே கருதினாள்.

மதுர பாவனை : மதுரம் என்பது நாயகன் நாயகி இணக்கம். ராதை இத்தகைய இணக்கம் கொண்டிருந்தாள். ஏனைய யாவும் மதுரபாவனையில் அடங்கி விடுகின்றன.

இவைகளுள் ஏதேனும் ஒன்றை தனக்குரியதாக சாதகன் வைத்துக் கொள்ளவேண்டும்.

-ஸ்ரீராமகிருஷ்ணர்

# ஐயப்பனுக்கு ஏன் 18 படிகள்

| | |
|---|---|
| புராணங்கள் | 18 |
| தேவாசுரப்போர் | 18 நாட்கள் |
| பாரதப்போர் | 18 நாட்கள் |
| கீதையின் அத்தியாயங்கள் | 18 |
| மனிதவாழ்வை இயக்கும் அம்சம் | 18 |

மனித வாழ்வை இயக்கும் 18 அம்சங்களின் அடிப்படையில் அமைக்கப்பட்டவை ஐயப்பனின் ஆலயப்படிகள். அவற்றை அறிந்தும், கடந்தும் மெய்ஞான நிலைபெற்றால் ஐயப்பனின் அருட்பாதம் கிட்டும் என்பது அந்த தத்துவ உண்மை. அவை:

காமம், குரோதம், மதம், மாச்சரியம், ஆசை, திருட்டு, கோபம், டம்பம் ஆகிய அஷ்டராகங்கள் என்னும் 8 மன எழுச்சிகள்.

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய பஞ்சேந்திரியங்கள் 5

சத்வ, ராஜஸ, தாமஸ ஆகிய 3 குணங்கள்.

வித்தையை, அவித்யை ஆகிய 2 சக்திகள்.

இவைதான் (8+5+3+2) 18 படிகளின் அம்சங்கள்.

இன்னொரு விளக்கம் : வேதம் 4, சாஸ்திரம் 6, உபாயங்கள் 4 வர்ணங்கள் 4. இவற்றை அந்தப் பதினெட்டுப்படிகளும் குறிப்பிடுவதாகவும் கூறுவது உண்டு.

தொகுத்தவர் : கமலா மாரியப்பன் - கோவை.

# திருவடியே சரணம்!

(கவிஞர் அண. இராமநாதன்)

வேதமுதல் ஆனவனே விண்ணோர்கள் தம்தலைவா!
ஆதிமுதல் ஆனவனே அன்பர்தமக் கெளியானே!
பாதிமதி அணிவார்தம் மைத்துனனே! பரந்தாமா!
சேதமிலா வாழ்வருளும் திருவேங்கட மலையானே!

திருவடியார் போற்றத் திருமலையில் வாழ்பவரே!
கருவறையில் வண்டாகி காணுமிந்த உயிராகி
ஒருவழியும் காணாது உழன்று தவித்தலைந்து
திருவடியே சரணென்றேன் திருவேங்கடமலையானே!

கிளர்ந்தெழுந்(து) ஒளிர்வைரக் கிரீடம் அணிந்தவனே!
களந்தனிலே கீதைசொலி வையகத்தைக் காத்தவனே!
உளந்தனிலே நின்றனை(து) ஒளிவிளக்கே உத்தமனே!
விளங்குபுகழ் மேவுதிரு வேங்கட மலையானே!

காற்றிற்கும் தீயதற்கும் காரணத்தை நானறியேன்!
நாற்று முளைக்கும்விதம் நானறியேன்! நானிலத்தே
சோற்றுக்கே உழைத்தேன்! துதித்தறியேன் உன்பாதம்!
தேற்ற வருவாய் அன்புத் திருவேங்கட மலையானே!

பாட்டான பாட்டெல்லாம் பாடி அலுத்துவிட்டேன்!
நாட்டோர்கள் புகழ்ந்தாலும் நல்லவழி உன்பாதம்
கூட்டுவிக்கும் எனஅறிந்து கரங்குவித்தேன் கோவிந்தா!
வேட்புற் றருளுகதிரு வேங்கட மலையானே!

நாடோறும் உனப்போற்றி நன்மை பலபெற்றுக்
கோடானு கோடிமக்கள் கொண்டாடும் மலர்க்கண்ணு!
ஈடேறும் எண்ணங்கள் என்றுநம்பி வந்தநான்
தேடேனே வேறுதுணை! திருவேங்கட மலையானே!

புள்ளி மயிலன்ன இருமாதர் புறமிருக்க
வெள்ளிரதம் தங்கரதம் மீதேறி வந்தாலும்,
உள்ளு தோறுவந்து உனைமறவா மெய்யடியார்
உள்ளத் துறையும் திருவேங்கட முடையானே!

தாயாகித் தந்தையுமாய் தாங்கும் தயாபரனாய்,
சேயாகித் தோழனுமாய் தினமருளிக் காப்பவனே!
ஓயாக் கவலையினால் உழலுகின்ற வாழ்க்கையிலே
தேயாது செழிக்கஅருள் திருவேங்கட மலையானே! (8)

கண்ணுக்கும் காதுக்கும் கருத்துக்கும் ஆனந்தம்!
புண்ணுக்கும் தேன்மருந்து புகழ்மிக்க உன்நாமம்!
பண்ணுக் கிசைக்கும்வேய்ங் குழந்தெடுத்த பரந்தாமா!
விண்ணுக்கு மேலாம்திரு வேங்கட மலையானே!

அண்ணலே பதிகள்பல அமர்ந்த பெருமாளே!
மண்ணுக்குள் உன்நாம மகிமை பலவாகுமன்றோ!
கண்ணனே! கார்மேக வண்ணனே! காசினியில்
வெண்ணையுண்ட பால!திரு வேங்கட மலையானே!

பாரளந்த மாயவனே! பார்த்திபனார் தம்போரில்
தேரழுந்த வைத்(து)அவனை வெற்றிபெறச் செய்தவனே!
தூரிழந்த விழுதுகள்போல் துவளுமெமக் குன்னையன்றி
வேறுதுணை இல்லை!திரு வேங்கட மலையானே!

கற்கண்டும்பாலும் கனிரசமும் போன்றமைந்த
சொற்கொண்ட பாவால் துதித்திருக்க வேண்டுமையா!
கற்கொண்டு கடல்கடந்து கடும்அரக்கர் தமைவெல்ல
விற்கொண்ட கைய!திரு வேங்கட முடையானே!



# யானை முதல் குரங்கு வரை

திரு. தேதியூர் பாலு - மயிலாடுதுறை.

யானை... நாற்கால் விலங்குகளுள் அற்புதமான மிருகம். விலங்கினங்களிலேயே மகத்தான சரீரம். ஆனாலும் அது ஓர் சாகபக்ஷிணி. அந்த மிருகத்தின் சிறப்பு உறுப்பு அதன் துதிக்கை. பருத்த உடல், சிறுத்த கண்கள், ஓயாது அலை பாயும் காதுகள். நடையில் பிரமாதமான காம்பீர்யம். வனத்திலே வாழும் போதும் இனம் பிரியாத பாசத்துடன் கூடிய கூட்டு வாழ்க்கை. விலங்கென்ற முறையில் இதன் பெருமையைக் கூறவரவில்லை. அது படிக்கும் மாணவர்க்கு ஆசிரியர் தரும் கட்டுரை.

யானையின் சிறப்பு அது பிரணவ சொரூபம். மகா கணபதியின் படிமம். கஜ வழிபாடு மேன்மையுள்ளது. திருக்கோவில்களில் யானையுண்டு. யுத்த களத்திலும் யானையுண்டு. அர்ச்சாவதார பவனியிலும் கஜவாஹணம் உண்டு. சித்திரத்தில் சிற்பத்தில் வடிவமைப்பில் விசேஷ இடமுண்டு. இலக்கியத்தில் புராணத்தில் யானையின பெருமை சிலாகிக்கப்படுகிறது. மத்தகஜம் மாண்புள்ள விலங்கு.

குரங்கு - ஆகா... அனுமனின் நினைப்பு வரும். குரங்கு சேஷ்டை, மனக்குரங்கு, கிளை தாவும் நேர்த்தி, பக்தர்களின் பிரேமைப் பிடிப்புக்கு உவமையாக சொல்லப்படும் சீர்மை. புலால் மறுக்கும் பெருமை. பூஜ்யமாக வழிபடப்படும் மகத்துவம். வனத்திலே வாழ்ந்தாலும் மலையிலே வாழ்ந்தாலும் வீதிகளில் மக்கள் குடியிருப்பிலே வாழ்ந்தாலும் விவேகத்துககுப் பேர் போன விலங்கு. மனித இனத்தின் பரிணாம முகிழ்வின் முந்தய படி - இப்படியெல்லாம் ஏற்றப்படும், போற்றப்படும் வானரத்தை, குறவஞ்சியிலிருந்து தற்கால கவிஞர்கள் வரை பாடாதார் யார் உண்டு. புகழ்ந்து பேசாதார் யார் உண்டு. ஆப்பு பிடுங்கிய குரங்காகட்டும் பஞ்சதந்திரக் கதையில் வரும் குரங்காகட்டும் சுவாரஸ்யமான விலங்கு இந்த மர்க்கடம். மந்தியின் மேன்மை உணர்த்தாத மனிதர் யாருண்டு.

ஆனால்... பிள்ளையார் பிடிக்க குரங்கான கதை வேடிக்கை செய்தியல்ல. விளையாட்டாகக் கூறப்படும் பழமொழியும் இல்லை. செயல் தொடங்கும் போது கஜானனான பிள்ளையாரை வழிபட வேண்டும். அவர் விக்னம் தீர்க்கும் முழுமுதற்கடவுள். செயல் பூர்த்தியாகும் போது ஆஞ்சனேய உதஸவம் நடத்த வேண்டுவது மரபு.

இந்தக் கட்டுரையின் நோக்கம்... யானையின் செயல் சொல்லி வேங்கடமலையின் சிறப்பைப் பற்றி ஆழ்வார் அனுபவித்த ஒரு அற்புதமான செய்தியைச் சொல்வதுதான்.

அதோ அந்த மலைச்சாரலிலே... ஆம் அந்த வேங்கடமலைத் தாழ்வரையில்தான். (தந்தியொன்று - தந்தி என்பது ஆண் யானையையே குறிக்கும் தண்டமிழ்ச் சொல். தந்தம் உடையது தந்தி) தன் காதலியை - பிடியை நேசிக்கிறது. எல்லையற்ற அன்பு. வரையற்ற பிரேமை. கூடி வாழ்கிறது. கலந்து விளையாடுகிறது.

காதல் கனிந்து தம்பதிகளாகின்றன. தாம்பத்ய சுகம் அனுபவிக்கின்றது யானைப் பேடுகள்

சுகத்தின் விளைவு.

பிடி கருவுறுகிறது.

தன் காதலியை - கருவுற்று கவர்ச்சியாகக் காட்சி தரும் மனைவியை மோகத்துடன் பார்க்கிறது.

காதல் கனிவு கொஞ்சுகிறது. குலாவுகிறது களிக்கிறது. உவகையுடன் உல்லாசமாக அந்த தம்பதிகள் வனத்தில் வளைய வருகின்றன.

கர்ப்பமான தன் காதலியின் மேனியை மெல்லத் தடவுகிறது தன் துதிக்கையால். சிலிர்க்கிறாள் காதலி.

சற்றே ஊடல்... சிணுங்கல்... சிங்கார சேஷ்டைகள், காதலனை விட்டு அயலே நகர்கிறது பிடி.

'ஈதென்ன கண்ணே... கோபமா.. என் மேல் ஏன் தாபம்...' என்ன வேண்டும் உனக்கு...'

'மசக்கை' உணர்வுடன் காதலி அரைக்கண். மூடி மதத்தைப் பெருக்க, வாய்வழியே வழிகிறது மத்த நீர்.

"துயட்டலா... ஓககாளயா... என்ன வேண்டும் என் கண்மணிக்கு. இந்த நேரத்தில் உன் இச்சையை தட்டாமல் நிறைவேற்ற வேண்டும் அன்பே..."

பேசவில்லை பிடி. மூங்கில்காட்டுக்குள் தன் மேனியை மறைத்துக் கொள்கிறது.

"கேளடி... கண்ணே யாது உன் இச்சை என்ன வேண்டும் உனக்கு"

குறிப்பால் உணர்த்துகிறது. தன் விருப்பமான பொருளை சாப்பிட வேண்டும்... அதை என்று துதிக்கை நீட்டி உணர்த்துகிறது பெண்யானை.

ஆகா... இதுதானே இதற்கேன் இத்தனை தயக்கம். இதோ நொடியில் நீ இஷ்டப்பட்டதை தருகிறேன்.

மூங்கில் காட்டுக்குள் தன் வலிமையான துதிக்கையை நீட்டுகிறது காதலன் யானை. இளமூங்கில் குருத்து. இரண்டு கணுக்கள் உடைய தளிர் மூங்கில். பிடுங்கியெடுக்கிறது.

இதுதானே... உனக்கு வேண்டும்.

மௌனமாக காதலனைப் பார்க்கிறது பிடி.

காதலனனோ அந்த குருத்து மூங்கிலை சற்றே நசுக்கிச் சுவைத்துப் பார்க்கிறது. ஊஹூம் இதன் சுவை குறைவாக இருக்கிறதே. இதற்கு ருசியூட்ட வேண்டும்.

உயரப் பார்க்கிறது. ஆகா... அந்த மூங்கில் உச்சியில் தேன் கூடு தொங்கிறது. தான் பிடுங்கிய மூங்கில் குருத்தை அந்தத் தேன் கூட்டுக்குள் தோய்த்து எடுக்கிறது. தேன் சொட்டச் சொட்ட சுவைரஸம் பெருகப் பெருகத் தன் கர்ப்பிணி காதலிக்கு ஆசையோடு வாயில் ஊட்டுகிறது.

மகிழ்கிறாள் காதலி.

ஆகா என்ன அற்புதமான காட்சி இது.

இந்தக் காட்சியைக் கண்டு ரஸிக்கிறார் மல்லையில் அவதரித்த பூதத்தாழ்வார். இந்த எழில் காட்சியினை திருவேங்கடமலையில் கண்டு களித்த ஆழ்வார் மெய்யுருகப் பாடுகிறார். சிலிரக்கச் செய்கிறார். சிந்தையை ரஸனைப் படுத்துகிறார்.

"பெருகு மத வேழம்
 மாபிடிக்கு முன்னின்று
இரு கணிள மூங்கில் வாங்கி
 அருகிலிருந்த
தேன் கலந்து நீட்டும்
 திருவேங்கடம் கண்டீர்!"

இந்த ஆண் யானை எப்படி தன் காதலியின் இஷ்டத்தைப் பூர்த்தி செய்கின்றனதோ அதே போல் திருவேங்கடத்தான் தன் பக்தர்களது இஷ்டத்தைப் பூர்த்தி செய்து விடுவான் என்பது குறிப்பு.

இப்படி யானையில் தொடங்கினேன். குரங்கில் முடிக்க வேண்டாமா...

அதோ... பேயாழ்வார் திருவேங்கடமலையில் திருவெண் எழுத்தை உச்சரிததுக்கொண்டே வலம் வருகிறார். அந்த ஸப்தகிரியிலே ஒரு எழில் காட்சியைப் பார்த்து பிரமிக்கிறார். பரவசப் படுகிறார்.

குரங்கு ஒன்று. சுனைக் கரையில் படர்ந்து கிடந்த கரைச் செடிகளில் பழுத்துக் குலுங்கும் கனிகளை இரு கரங்களாலும் பறித்துத் தன் வாயிலே போட்டுக் கொள்கிறது. தன் இரு கன்னங்களுக்குள் அடக்கிக் கொள்கிறது. அதுதானே குரங்கின் இயல்பு.

பழத்தைக் குதப்பிக் கொண்டு உத்ஸாகமாகக் குதிக்கிறது. கும்மாளமிடுகிறது. சுனையில் உற்றுநோக்குகிறது. தண்ணீர் பரப்பில்...

தெரிவது இன்னொரு குரங்கா...

நிழலை நிஜமென்று நினைத்து மயங்குகிறது.

தன்னைப் போல் இன்னோர் குரங்கு, வாய்நிறைய கனிகள். தான் முறைத்துப் பார்க்க அதுவும் முறைத்துப் பார்க்கிறது.

தன் கரங்களை நீட்டுகிறது.

'தா... தா... உன் பழங்களைத்தா...' என்று நயந்து கேட்கிறது.

எத்தகைய சுவாரஸ்யமான காட்சி இது! பேயாழ்வார் திருவேங்கடநாதனை பக்தியுடன் நினைக்கிறார். பாடுகிறார்.

"பார்த்த கடுவன் சுனைநீர்
 நிழல்கண்டு
பேர்த்தோர் கடுவன் எனப் போந்து
 கார்த்த
களங்கனிக்கும் கை நீட்டும்
 வேங்கடமே! மேனாள்
விளங்கனிக்கு க்கன்று எறிந்தான்
 வெற்பு"

எத்தகைய இன்பமூட்டும் காட்சி. எழில் கோர்க்கும் காட்சி!

நித்தியத்தை மறந்து மாயையை நிஜமென மயங்கும் ஆன்மாவின் மயக்கத்தை மனதில் நிறுத்தி ஆழ்வார் பாடிய இந்தப் பாசுரம்... பரவசப்படுத்தும் அற்புதப்பாடல் அல்லவா! 'பூதத்தில்' தொடங்கிப் 'பேயில்' முடிக்கிறேன்.

யானையில் தொடங்கி குரங்கில் முடித்தேன். இரண்டுமே திருவேங்கடத்தானின் திவ்ய நிலையை உணர்த்தும் உன்னதமான பாசுரங்கள் அல்லவா!

திருவேங்கடவன் திருவடிகளே சரணம்!

* * *

# பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்

திரு. பஞ்சு. அரங்கநாதன், ஸ்ரீரங்கம்.

பன்னிரு ஆழ்வாரகளில் நான்காவதாக வைத்துப் போற்றபபடுபவர் பார்க்கவர், பக்திசாரர, மழிசைப்பிரான், மஹீஸாரபுரீஸவரர் என்றெல்லாம் புகழப்படும் "திருமழிசை ஆழ்வார்" ஆவார். ஸ்ரீமந்நாராயணனுடைய ஆழி (ஸ்ரீசுதர்சனம்) அமசமாய் அவதாரம் செய்தவர திருமழிசையார். இவர் அருளிச்செய்த பாடல்கள் மொத்தம் 216 ஆகும். 120 பாடல்களை உடைய திருச்சந்த விருத்தம் முதலாம் ஆயிரத்துள் (நாலாயிர திவ்யப்பிரபந்தம பாடல் 752 முதல 871 முடிய) வைக்கப்பட்டுள்ளது. 96 பாடல்களை உடைய நான்முகன் திருஅந்தாதி மூன்றாம் ஆயிரத்துள் (பாடல் 2382 முதல் 2477 முடிய) வைக்கப்பட்டுள்ளது. திருமழிசை ஆழ்வாருடைய பாடல்கள் திருமாலின் உயர்வையும், முழுமுதன்மையையும் தெளிவாகக்கூறும். இயற்கை வருணனைகள் அமையப்பெற்று பொருட்செறிவும், எளிமையும் நிறைந்து வைகுந்தநாதன் திருவடிகளுக்கு அன்பு உண்டாக்கும். அவருடைய அருள் வரலாற்றை சிறிது காணபோம்.

### தோற்றம் :

இன்றைய சென்னை மாநகரத்திற்கு 20 கி.மீ. மேற்கே உள்ளது "திருமழிசை" என்னும் சிறந்த தலமாகும். இங்கு கி.பி. ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந்த பார்க்கவர் என்ற முனிவரின் மனைவி கனகாங்கி அம்மையார் சித்ராத்திரி ஆண்டு தை மாதம் கிருஷ்ண பட்சம் (தேய்பிறை) பிரதமை திதியில் மகநட்சத்திரம் கூடிய ஞாயிற்றுக்கிழமை அன்று கை, கால முதலிய உறுப்புகள் இல்லாத ஒரு பிண்டத்தைப் பெற்றெடுத்தார. மிகவும் மனம் வருந்திய பெற்றோர் அப்பிண்டத்தை ஒரு பிரம்புப் புதரில வீசி எறிந்தனர். இறைவன் அருள் நோக்கம் பெற்ற அப்பிண்டம் ஓர் அழகிய ஆண் மகவாக மாறி அழத்தொடங்கியது. பிரம்பு அறுக்க அங்கு வந்த திருவாளன் என்ற பிரம்புதொழிலாளி அக்குழந்தையை எடுத்துச் சென்று தன் மனைவி பங்கயச் செல்வியிடம் கொடுத்தான். குழந்தையில்லாத அம்மங்கையும் மிகவும் மகிழ்ந்து அன்புடன் வளர்த்து வந்தாள். ஆனால் அக்குழந்தை அழுவது, சிரிப்பது, சிறுநீர் கழிப்பது போன்ற செயல்கள் இன்றி பரிபூரணமாய் இருந்தது. இந்த அதிசயச் செய்தி அறிந்து ஓர் வைணவப் பெரியார் பசும்பாலைக்காய்ச்சிக் கொண்டு வந்து தெய்வக் குழந்தையிடம் வைத்து "இதை அமுது செய்யவேண்டும்" என்று பணிவுடன் வேண்டினார். குழந்தையும் பாலை அருந்தியது. இதனால மனம் மகிழ்ந்த பெற்றோர்கள் தினமும் பால் கொண்டு வந்து குழந்தைக்கு அளிக்க வேண்டும் என்று விண்ணப்பித்தனர். அப்பெரியவரும் தினமும் தன் மனைவியுடன் வந்து பால் அமுது படைத்து வந்தார். ஒரு நாள தெய்வக்குழந்தை சிறிது பாலை மீதம் வைத்தது. அதை அருந்திய அம்முதிய தம்பதிகள இளமையை மீண்டும் அடைந்தனர். நாளடைவில் அவர்களுக்கு ஒரு ஆண் குழந்தையும் பிறந்தது. அப்பிள்ளைக்கு கணி கண்ணன் என்று பெயர் சூட்டிக் கல்வி கற்பித்து வந்தனர்.

### குருவருள் :

திருமழிசையார் இளமையில் அஷ்டாங்க யோகம் பயில விரும்பி சைவம், வைணவம், சாக்கியம், சமணம் முதலிய பல சமயங்களையும் ஓதி உணர்ந்து முடிவில் சைவராகி சிவவாக்கியர என்ற பெயர் தரித்து சிவஸ்தல யாத்திரை செய்து வந்தார். இவர திருமயிலையை அடைந்த போது, அங்கு பூஞ்சோலையில் இருந்த பேயாழ்வார் இவரை தடுத்தாட்கொண்டு எட்டெழுத்துப் பெரிய திருமந்திரத்தை உபதேசித்து 'திருமழிசை ஆழ்வார்' என்ற பெயர் சூட்டினார். இவர் அருளால் பிறந்த கணி கண்ணர இவர் சிறப்பு அறிந்து வந்து திருவடிகளை வணங்கி சீடரானார. இருவரும் காஞ்சிமாநகரம் சென்று திருவெஃகாவில் எழுந்தருளி இருக்கும் புஜங்க சயனப் பெருமாளுக்கு சேவை செய்து வந்தனர்.

### பைந்நாகப்பாய் சுருட்டிக் கொள் :

தினமும் பிச்சைக்கு சென்று வந்த வாகவி கணி கண்ணரை தன் மீது ஒருபாட்டுப் பாடு

மாறு காஞ்சி மன்னன் பல்லவ ராயன் வற்புறுத்தினான். திருமாலைத்தவிர மானுடம் பாட மாட்டேன் என்று கணிகண்ணர் மறுக்கவே 'என் காஞ்சியை விட்டு உடனே வெளியேறு' என்று ஆத்திரத்தில் அறிவு இழந்து கடுமையாக உத்தரவு இட்டான் காஞ்சி மன்னன்.

கணிகண்ணர் ஆழ்வாரை அடைந்து விபரம் கூறி அனுமதி கேட்க ஆழ்வார் மனம் வருந்தி, 'நானும் கூடவருகிறேன், பாகவத அபசாரம் செய்யும் இடத்தில் பகவான் எப்படி இருக்கலாம்?' என்று சினந்து ஆலயம் சென்று,

"கணிகண்ணன் போகின்றான்,
காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்க
வேண்டா - துணிவுடைய
செந்நாப்புலவனும் போகின்றேன்
நீயும் உன்றன்
பைந்நாகப்பாய்சுருட்டிக்கொள்"

என்று பிரார்த்திக்கவே, பக்தவத்சலனும், பக்தப்ராதீனனுமாகிய புஜங்கசயனப்பெருமாள், திருமழிசையாரின் சிறப்பை இவ்வுலகம் அறிந்து கொள்ள வேண்டும் என்ற திருவுள்ளத்துடன் தம் யோக நித்திரையை விட்டு, பைந்நாகப்பாயை சுருட்டிக் கொண்டு ஆழ்வாருடன் நகரை விட்டு வெளியேறினார். அவ்வளவில் காஞ்சி மாநகரில் எழுந்தருளியிருந்த எல்லா தேவர்களும் எம்பெருமானைப் பின்தொடர நகரம் பொலிவிழந்து காரிருளில் மூழ்கியது. ஒற்றர்கள் மூலம் விபரம் அறிந்த மன்னன் கணிகண்ணரை அணுகி அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அறியாப்பிழையை மன்னித்து காஞ்சி மாநகரம் எழுந்தருள வேண்டும் என்று மன்றாடினான். கணிகண்ணர் ஆழ்வாரை வேண்ட, அவர் வைகுந்தநாதராகிய சொன்ன வண்ணம் செய்த பெருமாளை விண்ணப்பிக்க அனைவரும் நகரம் திரும்பினர். இறைவன் ஒரு இரவு மட்டும் தங்கிய இடம் "ஓர் இரவு இருக்கை" என்று வழங்கலாயிற்று. இறைவனுக்கு "யதோக்காரி, சொன்ன வண்ணம் செய்த பெருமாள்" என்ற திருநாமங்கள் ஏற்பட்டன. இவ்வாலயம் விஷ்ணு காஞ்சிக்கு மேற்கே ஒரு கி.மீ. தொலைவில் உள்ளது.

## இலக்கியச்சான்றுகள் :

பரமபக்தரும் பக்திசாரருமாகிய திருமழிசை ஆழ்வார் விருப்பப்படி இறைவன் அவர் தமிழ்ப் பாடல்களைக் கேட்க ஆர்வம் கொண்டு அவருடன் சென்ற அருள் வரலாற்றை தமிழ் இலக்கியங்கள் புகழ்ந்து பேசின.

"பழமறைகள் முறையிடப்-
பைந்தமிழ்ப்பின் சென்ற
பச்சைப்பசும் கொண்டலே"
(குமரகுருபரர், மீனாட்சிபிள்ளைத்
தமிழ்ப்பாடல்-2)

"ஆடவரத்தாழ்பாயலராளரை
நீ தானே தொடர்ந்தாயோ?
சூழ்பாயோடு உன்னைத்
தொடர்ந்தாரோ?
(தமிழ்விடுதூது பாடல் 92-3)

திருமழிசையார் திருக்குடந்தை செல்லும் வழியில் ஓய்வுக்காகப் பெரும்புலியூரில் ஒரு வீட்டுத்திண்ணையில் அமர்ந்தார். அத்திண்ணையில் வேதம் ஓதிக்கொண்டு இருந்த வேதியர்கள் உடனே ஓதலை நிறுத்திட மனம் வருந்திய ஆழ்வார் திண்ணையை விட்டுப் புறப்பட்டார். மீண்டும் வேதம் ஓதத் தொடங்கிய வேதியர்கள் வேத ஒலிகள் புலன் ஆகாமல் தடுமாறி, பின் தவறு உணர்ந்து திருமழிசையார் திருவடிகளை பணிந்து உய்ந்தனர். இவ்வேதியர்கள் விரும்பிய வண்ணம் பெரும்புலியூரில் சிலகாலம் வாழ்ந்த ஆழ்வார் பிச்சை ஏற்று வந்தார். அவ்வூர் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவன் ஆழ்வார் செல்லும் திருவீதிகள் தோறும் தம் திருமுகத்தைத் திருப்பி நோக்குவார் ஆயினார். இவ்வற்புதம் அறிந்த பெரும்புலியூர் அடிகள் என்ற யாக சாலைத்தலைவர், ஆழ்வாரை அழைத்துச் சென்று அக்கிரபூசை என்ற உயர்ந்த சிறப்பை ஆழ்வாருக்கு செய்யும் காலத்து வேள்விச சடங்கர்கள் தடை செய்தனர். அடிகள் மனம் வருந்தியதைக் கண்ட ஆழ்வார் தம்திருமேனியில் திருப்பாற்கடலில் திருமால் பள்ளி கொண்டுள்ள திருக்காட்சியை யாவரும் காண காண்பித்து அருளினார்.

## ஏடெதிர் சென்றது :

பின்னர் ஆழ்வார் திருக்குடந்தை சென்று ஆராஅமுதனை வணங்கி தாம் அதுவரையில் பாடிய எல்லா பாசுரங்களையும் காவிரி வெள்ளத்தில் விட்டார். காவிரி வெள்ளத்தை எதிர்த்து வந்த பாசுரங்களை மட்டும் எடுத்து ஆராவமுதனை சேவித்து, உலகிற்கு உதவியாகப் அப்பாசுங்களை திருச்சந்த விருத்தம், நான்முகன் திருவந்தாதி என்று அருளிச்செய்தார். திருமழிசையார் திருப்பாடல்களில் சில காண்போம்.

## நாராயணன் தங்கும் இடம் :

திருமால் பாற்கடலில் அர

வணையில துயிலகிறார் என
பர சிலர். வேஙகடமலை
யில நின்ற கோலம் காண்க
என்பர சிலர். வானுலகில
பரமபதததில நிதய சூரிகளு
டன் வாழ்வதைச சொலவர
சிலர. ஆனால் திருமழிசை
ஆழ்வார் அறுதியிட்டுக் கூறு
கிறார். மேற்கண்ட செயதிகள
எல்லாம் நான் இல்லாதபோது.
நான் பிறந்து அவன் அடி
மையானபிறகு அந்த திருமகள
நாதன் நிற்பதும், இருப்பதும்,
கிடப்பதும் என் நெஞ்சத்தா
மரையில் என்கிறார். நெஞ்சை
அளளும் அப்பாடல் இதோ...

"நிற்பதும் ஓர் வெற்பகத்தில்,
இருப்பும்விண், கிடப்பதும்
நற்பெரும் திரைக்கடலுள்; நான்
இல்லாதமுன் எல்லாம்,
அற்புதன், அனந்தசயனன்,
ஆதிபூதன் மாதவன்
நிற்பதும், கிடப்பதும், இருப்பதும்
என் நெஞ்சுளே"
(நாலாயிர திவ்யப்பிரபந்தம் பாடல்
816, திருச்சந்தம் 65)

நாராயணன் அவ்வாறு தன்
நெஞ்சில் புகுந்தது எதனால்?
அதன் விலை யாது? எட்
டெழுத்துப் பெரிய திருமந்தி
ரத்தை அல்லும் பகலும் அன
வரதமும் தியானித்து அன்பே
என் அன்பே என்று அழுது,
அரற்றி அறிவு அழிந்து, ஆண
வம் அழிந்து அதனால் அவன்
அருளாலே அவனை உணர்ந்
தேன். இனி எண்ணுதற்கு சம
யங்களும் இல்லை. மற்றொரு
தெய்வம் இனி மறுமைக்கும்
இலலை. என்போல் அவனை
யார் அறிவார என்று பெரு
மிதம் கொள்கிறார் ஆழ்வார்.

"பாலில் கிடந்ததுவும், பண்டு
அரங்கம் மேயதுவும்
ஆலில் துயின்றதுவும் ஆர்
அறிவார்? நாயகத்து
ஒருபோதும், வாளாது
மெய்ப்போதும், அய்ய
அறிபோதும் யான் அறிந்தவாறு
(நாலாயிர திவ்யப்பிரபந்தம்பாடல 2384

அபபடியாயின ஆழவாரைப
போல நாமும தறபோ
தம ஒழிந்து நாராயணனை
அடைய முடியுமா? என்று
மனம் கலங்குவாரக்கு எளிய
வழி கூறுகிறார் திருமழிசையார்.
திருமாலையே கணடு, கேடடு,
உண்டு, உயிர்த்து வணங்கும
நமக்கு உய்வு உறுதி. ஆனால்
மறந்தும் புறம் தொழவேண
டாம் என்கிறார் திருமழிசையாழ்
வார்.

"வாழ்த்துக வாய், காண்க கண்,
கேட்க செவி, மகுடம்
தாழ்த்து வணங்கினால் தகை-
மையால் - நற்றத
தூய என்றும் நினைப்பு என
நோக்கை யால் தன்னை
வாயவன்னை கூப்பி மதித்து.
(நாலாயிர திவ்யப்பிரபந்தம்
பாடல் 2392 அந்தாதி 11)

## நிறைவு :

மெய்யன்பர்கள் அனைவரும
இத்துணை உயரவும், சிறப்பும்
உடைய திருமழிசை ஆழ்வா
ருடைய பாசுரங்களை கற்று,
பாராயணம செய்து எட்டெ
ழுத்து பெரிய திருமந்திரத்தை
தியானித்து பல்லாண்டு பல
நலம பெற்று வாழ பிரார்த்திக்
கிறேன்.

நாராயணஸ்மிருதி.



## ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில்

### ஸ்ரீநிவாசமங்காபுரம்

ஆர்ஜித ஸேவைகள் :

| | | | |
|---|---|---|---|
| 1. | நித்ய அர்ச்சனை, (ஒரு வருடத்திற்கு) | ரூ | 42/- |
| 2. | நிரந்தர நித்ய அர்ச்சனை, (ஆயுள முழுவதும்) | ரூ. | 542/- |
| 3. | கல்யோத்ஸவம், (நாள தோறும்) | ரூ. | 300/- |
| 4. | அபிஷேகம் (வெள்ளிக்கிழமைகளில் மட்டுமே) | ரூ. | 100/- |

தளிகைகள் (நைவேத்தியங்கள்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | தத்யோதனம் | ரூ. 75/- | 5. | வீரா | ரூ.400/- |
| 2. | புளியோதரை | ரூ.100/- | 6. | தோசை(படி) | ரூ.400/- |
| 3. | பொஙகல் | ரூ.200/- | 7. | கேஸரிபாத | ரூ.300/- |
| 4. | சர்க்கரைப்பொங்கல | ரூ. 35/- | 8. | ஸைகாபாத் | ரூ.250/- |

மூன்று நாட்களுக்கு முனபேயே மேறபடி ஸேவைகள் மற்றும் தளிகைகளுக்கான தொகையினைச் செலுத்துதல் வேண்டும்.

(திருப்பதி - சித்தூர் நெடுஞ்சாலையில் திருப்பதியிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில் இத்திருத்தலம் உள்ளது).

# ராணி லட்சுமி அம்மணி

திரு. பஞ்சு அரங்கநாதன் - ஸ்ரீரங்கம்.

ஸ்ரீ பதி ராணி லட்சுமி அம்மண்ணி தேவி அவர்கள் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த மிகச்சிறந்த பக்தி சிரோன்மணி ஆவார்.

ஸ்ரீரங்கநாதனிடம் ஆதிகால ஆழ்வார்களைப் போல பேரன்பும், அசையாத நம்பிக்கையும், பக்தியும் கொண்டிருந்த ராணி அவர்கள் அரசாங்கம சம்பந்தமான தன்னுடைய எல்லா கடிதப்போக்குவரத்துகளிலும் தன் பெயரை கையொப்பமாக இடாமல் "ஸ்ரீரங்கா" என்றே கையொப்பம் இட்டுள்ளார்கள். ["Rani Lakshmi Devi has signed her letters as "Sree Ranga" Histrey of Mysore by Hayavadana Rao Volume III Chapter X Page 616"]

இவ்வாறு முக்கிய கடிதங்களில் கூட தன் கையொப்பத்தை இடாமல் "ஸ்ரீரங்கா" என்றே கையொப்பம் இட்டு வந்த ராணி அவர்களின் வாழ்க்கை வரலாற்றையும் அவர்கள் வாழ்வில் ஸ்ரீரங்கன் நடத்திய அற்புதங்களையும் ஒரு சிறிது காணலாம். ராணி அவர்கள் திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டையின் கில்லேதார் ஆக பதவி வகித்த கோபாலராஜ் அரசின் மகள் ஆவார். ராணி அவர்கள் திருச்சியில் வாழ்ந்த வரை பூலோக வைகுண்டமான ஸ்ரீரங்கம் சென்று,

"குடதிசை முடியை வைத்துக்,
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித் தென்திசை
இலங்கை நோக்கி
கடல்நிறக் கடவுள் எந்தை
அரவணைத்துயிலுமா கண்டு
உடல் எனக்கு உருகுமாலோ என்
செய்கேன் உலகத்தீரே"
(நாலாயிரதிவ்யப்பிரபந்தம்பாடல் 890)

என்ற தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிச்செய்த திருமாலை போன்ற அருளிப்பாடுகளை இசையுடன் பாடி உள்ளம் உருகி, பகதி செய்து வந்தார்கள்.

ஸ்ரீரங்கநாதன் அருளால் மைசூர் மன்னர் இரண்டாம் கிருஷ்ணராஜ உடையார் ராணியை திருமணம் செய்து கொண்டு மைசூர் அழைத்துச் சென்றார். ஸ்ரீரங்கம் பெரிய பெருமாளைப் பிரிந்து செல்வதா எனறு வேதனையடைந்த ராணி அவர்கள் ஸ்ரீரங்கப்பட்டணத்தில் அற்புதன், அனந்தசயனன், ஆதிபூதன், மாதவன், பள்ளி கொண்ட வடிவிலேயே காட்சி தருவது கண்டு மகிழ்ந்து தினமும் மூன்றுவேளையும் வழிபாடு செய்து அரங்கனை வணங்கி வந்தார்.

அடியார்களை சோதிப்பது ஆண்டவனின் திருவிளையாட்டல்லவா? மூன்று வேளையும் அரங்கனை வணங்கி வந்த ராணி லட்சுமி அம்மண்ணி தேவி அவர்களுக்கு அரங்கனின் ஆலயததில் நுழையவே அனுமதி மறுக்கப்பட்டது.

ஆம், மன்னர் இறந்தார். தளபதிப் பொறுப்பில் இருந்த ஹைதர்அலி ஆட்சியைக் கைப்பற்றினான். அரச குடும்பத்தாரை வீட்டுக் காவலில் வைத்து பொறுப்பை யாசின கான என்ற ஒற்றைக் கண்ணனிடம் விட்டான். யாசின்கான் வெறியன். அரச குடும்பத்தாரை வெளியே விடவே மறுத்தான். மிகுந்த முயற்சிக்குப் பின்பு ராணி மட்டும் தினமும் ஒருமுறை மட்டும் ஆலயம் செல்ல அனுமதி கிடைத்தது. இந்நிலையில் ராணி அவர்கள் சிருங்கேரி சுவாமிகளை தரிசிக்கச் சென்றார். ராணி திரும்பி வருவதற்கு முன்பு யாசின் இரண்டு அரச குடும்பத்து வாரிசுகளையும் விஷம் வைத்து கொன்றுவிட்டான்.

தலைநகரம் திரும்பி வந்த ராணி அவர்கள் விபரம் அறிந்து மனம் வருந்தி அரங்கன் முன் சென்று கண்ணீர் விட்டு,

"வேதநூல்பிராயம் நூறுமனிசர்
தாம் புகுவரேலும்
பாதியும் உறங்கிப்போகும்,
நின்றதில் பதினையாண்டு
பேதை, பாலகன் அதாகும்
பிணி, பசி, மூப்புத்துன்பட
ஆதலால் பிறவிவேண்டேன்
அரங்கமாநகர் உளானே'
(நாலாயிர திவ்யப்பிரபந்தட
பாடல் 874)

என்று வேதனையுடன் வாழ்நாளைக் கழித்து வந்தார். மீண்டும் யாசின் வடிவில் அரங்க னின் சோதனை தொடர்நதது ராணியின் பக்தியும் உலகம் அறிந்தது.

மைசூர் ராஜகுடுமபததின் கடைசி வாரிசான ராணியை தீர்த்துக்கட்ட விரும்பிய யாசின்கான் ஸ்ரீரங்கப்பட்டணத்துப பரம்பரை அர்ச்ச கரை வெளியே அனுப்பி விட்டுத் தன சொல் கேட்

கும் காசாசை பிடித்த ஒருவனை அர்ச்சனாக்கி ராணிக்கு வழங்கும் தீர்த்தத்தில் நஞ்சு கலந்து வழங்க உத்தரவிட்டான். அந்த சோதனையான நாளும் வந்தது. வழக்கம் போல ராணி அவர்கள் அரங்கன் ஆலயத்திற்கு வந்து,

"திருக்கண்டேன், பொன்மேனி
கண்டேன், திகழும்
அருக்கன் அணி நிறமும்,
கண்டேன் செருக்கிளரும்
பொன்ஆழி கண்டேன்,
புரிசங்கம் கைக்கண்டேன்
என் ஆழி வண்ணன் பால் இன்று"
(நாலாயிர திவ்யப் பிரபந்தம்
பாடல் 2282)

என்ற பேயாழ்வாரின் திருஅந்தாதிப்பாடலகளை மனமுருகிப் பாடி வணங்கி அரங்கன் திருவடிகளில் வீழ்ந்து எழுந்து திவ்ய தம்பதிகளின் பிரசாதம் பெறுவதற்காக நின்றார். விஷம் கலந்த தீர்த்தத்தை ராணியின் கைகளில் வார்த்தான்.

"பேயரே எனக்கு யாவரும்,
யானும் ஓர்
பேயனே யாவர்க்கும்,
இது பேசி என்?
'ஆயனே அரங்கா' என்று
அழைக்கின்றேன்
பேயனாய் ஒழிந்தேன்
எமபிரானுக்கே"
(நாலாயிர திவ்யப்பிரந்தப்
பாடல் 675)

என்ற குலசேகரப்பெருமாள் திருமொழியைப்பாடி அரங்கனின் தீர்த்தப் பிரசாதத்தை அருந்துகிறார். எளிமையான கம்பீரமான ராணியின் தோற்றமும், அரங்கனின் மீது அசைக்கமுடியாத பக்தியும், நம்பிக்கையும் பணத்தாசை கொணட அர்ச்சகனையும் கரைத்தது. மனச்சாட்சி குடைந்தது. அரங்கன் புன்முறுவல் பூத்தான்.

அர்ச்சகன்: தாயே, தீரததததை அருந்தவேணடாம.

ராணி: தீவினைகள தீரக்கும் திருமாலின திவ்ய பிரசாதத்தை ஏன் அருந்தவேண்டாம் என்கிறீர்?

அர்ச்சகன்: தாயே, பணத தாசையாலும், பயத்தாலும் யாசின சொல்படி கடுமையான நஞ்சை தீர்த்தத்தில் கலந்துவிடடேன். தயவுசெய்து அருந்த வேண்டாம். என்னை மன்னியுங்கள் அம்மா.

ராணி: அர்ச்சகரே! நீர், அரங்கனின் திருமேனியை தீண்டும் பாக்கியம் உடையவர். உமக்கு நான்சொல்ல வேண்டுவதில்லை. நஞ்சும் அமுதாம் நாதன் அடியார்க்கு. காளிங்க நர்த்தனன் அல்லவா என் அரங்கன். மீரா அருந்திய நஞ்சை தான் அல்லவா ஏற்றுக்கொணடான். குசேலனை கோபுரமாக்கியவன் என் கண்ணன். அடியார்க்கு எளியவன் அரங்கன். தண் கோட்டுமாமலரால தாழ்ந்தவெண்கோட்டு யானையை விண் உலகில் வாழ வைத்தவன் எம் இறை. அப்படிப்பட்ட கருணகரனா எனக்கு நஞ்சு அளிபபான்?

"மற்றும் ஓர் தெய்வம் உண்டோ?
மதியிலா மானிடங்காள்
உற்றபோது அன்றி நீங்கள் ஒருவன்
என்றுஉணரமாட்டீர்
உற்றம் மேல்ஒன்று அறியீர் அவன்
அல்லால் தெய்வமில்லை
கற்றினம் மேய்த்த எந்தை கழல
இணை பணிமின்நீரே"
(நாலாயிர திவ்யப்பிரந்தப்
பாடல் 880)

என்ற தொண்டரடிப்பொடியாரின் திருமாலை திருப்பாசுரத்தை அருதியிட்டு அனுபவித்து 'ஸ்ரீரங்கா ஸ்ரீரங்கா' என்றவாறே நஞ்சு அருந்தினார். அர்ச்சகன வியக்க, ஆலயம் திகைகக, யாசின் மயங்க, ராணி அவர்கள் நலமாக நின்றார்கள். அரங்கனை வணங்கி அரண்மனை சென்றார்கள். ராணியின் பக்தியை உலகம் அறிந்தது. போற்றியது.

இதன் பிறகு ராணி ஆங்கிலேயருடன் தொடர்பு கொண்டு அரங்கன் அருளால் மீண்டும் ஆட்சியை கைப்பற்றிப் பழைய அரச வம்சத்தை பொறுப்பில் அமர்த்தி நெடுங்காலம் அரங்கன் அருட்பணியில் வாழ்ந்து பரமபதம் அடைந்தார்கள். ஒரு அரச குடும்பத்து விதவை, வீட்டுககாவலில் அடிமையாக வாழ்ந்தவர், பரிதாபத்திற்குரியவர் அரங்கன் மீது கொண்ட அசையாத பக்தியினால் அற்புதங்கள நிகழ்த்தி மீண்டும் ஆட்சி செய்தார் என்றால் அவரது பக்தியை என்னென்பது? அரங்கனின் கருணை எவ்வாறு புகழ்வது! ✶

## உலகம் எத்தகையது?

நமது மனப்பான்மைக்கு ஏற்ப உலகம் நலம் நிறைந்ததாக அல்லது கேடு நிறைந்ததாகத் தென்படுகிறது. பூனையின் பல் எத்தகையது என்று பூனைக்குட்டியைக் கேட்டால் அது கருணையே வடிவெடுத்தது என்று கூறும். பூனையின் பல எத தகையதென்று ஒரு எலியைக் கேட்டால அதைவிடக்கொடியது ஒன்றுமில்லை என்று பதில வரும். பக்தன பூனைக் குட்டிக்கு நிகராகிறான். உலக வாழ்வில் உழல்பவர்கள எலிக்கு நிகராவர்.

# திரு விண்ணகர் (ஒப்பிலியப்பன்)

திரு. எஸ். லக்ஷ்மிநரசிம்மன் - பெங்களூர்.

இப்பூஉலகில் வைணவர்களுக்கு 108 திருப்பதிகள் மிக முக்கியமாகத் திகழ்கின்றன என நமது ஆழ்வாரகளும், ஆசாரியர்களும் அருளியிருக்கிறுர்கள். கோயில் (ஸ்ரீரங்கம்) திருமலை (திருப்பதி) பெருமாள் கோயில் (காஞ்சீபுரம்) மிக மிக முக்யத்வம் வாய்ந்தன.

இதில் சோழ நாட்டு திருப்பதிகளில் முதன்மையானது கோயில் (ஸ்ரீரங்கம்) இவ்வாறே ஆழ்வார்கள் (நம்மாழ்வார், திருமங்கை ஆழ்வார், பொய்கை ஆழ்வார், பேயாழ்வார்) மங்களா சாஸனம் செய்ததும், ப்ரஹ்மாண்ட புராண வரலாறு பெற்றதும், "திருவிண்ணகர்" ஒப்பிலியப்பன்) என்கிற அழகிய திருத்தலம்.

இந்த திவ்ய தேசத்தையும், இங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமானையும் நமது திருமங்கை ஆழ்வார்:-

**"வண்டுணு நறுமலரிடை கொண்டு**
**பண்டைநம் வினைகெட வென்று,**
**அடிமேல்**
**தொண்டருமமரரும் பணிய**
**நின்று அங்கு**
**அண்டமொட கலிட மளந்தவனே!**
**ஆண்டாய்! உனைக்காண்பதோர்**
**அருளெனக்கு அருளுதியேல்**
**வேண்டேன் மனை வாழ்க்கையை**
**விண்ணகர் மேயவனே!"** என்றும்,

ஸ்ரீபேயாழ்வார்:-

**"பண்டெல்லாம் வேங்கடம்**
**பாற்கடல் வைகுந்தம்**
**கொண்டங்குறைவார்க்குக்**
கோயில் போல்-வண்டு
வளங்கிளரும் நீள்சோலை
வண்பூங்கடிகை
இளங்குமரன் தன் விண்ணகர்"
என்றும்,

ஆழ்வார்களில் தலைமையான நம்மாழ்வார்,

"என்னப்ப னெனக் காயிகுளாய்
என்னைப் பெற்றவளாய்
பொன்னப்பன் மணியப்பன்
முத்தப்பனென்னப்பனுமாய்
மின்னப்பொன் மதில் சூழ்
திருவிண்ணகர்ச் சேர்ந்தவப்பன்
தன்னொப்பாரில்லப்பன்
தந்தனன் தனதாள் நிழலே"
என்றும் பாடிப்போற்றியுள்ளார்கள்.

அதாவது நம்மாழ்வாருக்கு இவ்வெம்பெருமான் சேவை சாதித்த ஐந்து வடிவழகு திருமேனியை தனது திருவாய் மொழியில் பாடி இருக்கிறுர். மேலும் ஸ்ரீநிகமாந்த மஹா தேசிகர்:-

"ஸம்பத் தாரித்ரய பாவாத்
அஸுகஸுகக்ருதே
பத்தநக்ராம பாவாத்
புண்யாபுண்யாதி பாவாத்
கபடருஜுதா
ஸர்வ லோகாதி பாவாத் !!"
என்கிறுர்.

இவ்வாறு புகழ் மிகுதும் பெருமையுடையதும் ஆன திருவிண்ணகர் பெருமானின் அருமை பெருமைகளை நாம் இங்குக் காண்போம்.

இத்திருத்தலம் தஞ்சை ஜில்லா கும்பகோணம் நகருக்கு 8 கிலோமீட்டர் தூரத்தில் மிகவும் பசுமையாக, தோட்டம் துரவிகளுடன் காணும் ப்ரதேசத்தில் அமைந்துள்ளது. இஃது ஆகாச நகரம், வைகுண்ட நகரம், திருவிண்ணகர், ஒப்பிலியப்பன் கோயில் என புராணங்கள் கூறுகின்றன. ஆயின் தற்போது உப்பிலியப்பன் கோயில் என்ற பெயருடன் விளங்குகிறது.

இந்த அழகுடைய திவ்ய தேசத்தில் எம்பெருமானுக்குத் திருவிண்ணகர் அப்பன், தன்னொப்பாரில்லப்பன், ஒப்பிலியப்பன் என திருநாமங்கள். பிராட்டியாருக்கு (தாயாருக்கு) பூதேவி, தரணிதேவி, வஸுந்தரை எனத் திருநாமங்கள்.

இங்கு தாயாரும், பெருமாளும் ஒருசேர ஒரே சந்நதியில் எழுந்தருளி சேவை சாதிக்கிறுர்கள். அதாவது பெருமாள் சதுர்புஜத்துடன் (இருதிருக்கரங்களில் திருவாழியும், திருச்சங்கும் ஏந்தி திருஅசையில் ஒரு திருக்கையும், மற்றொன்று கன்னிகாதானத்தை ஏற்கும் திருக்கை) கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம். தாயார் (பூதேவி) வடக்கு நோக்கி கைகளை கூப்பிய வண்ணம், திருமாங்கல்யத்தை ஸ்வீகரிப்பது போல் அமர்ந்த திருக்கோலம் மற்றும் தெற்கு நோக்கி கன்னிகாதானம் செய்வது போன்று ஸ்ரீமாரக்கண்டேய மகரிஷியும் எழுந்தருளி இருக்கிறுர்.

இத்திருத்தலத்தில் கருடன்,

காவேரி, தர்மதேவதை, மார்க்கண்டேய முனிவர்களுக்கு ப்ரத்யக்ஷமாக சேவை கொடுத்து அருளினார் என்பது ப்ரஹ்மாண்ட புராணம் மூலமாக அறிகிறோம். மேலும் இத்தலத்து எம்பெருமானும் பிராட்டியும், மார்க்கண்டேய முனிவரின் அருந்தவப்பயனால் அவதரித்தார்கள் என அறிகிறோம்.

மார்க்கண்டேய முனிவரின் வளர்ப்புப் பெண்ணான பூதேவியை இவ்வெம்பெருமான் திருமணம் புரிந்தார். இங்கு அதே திருமணக் காட்சியை, உலகத்தார்களும் கண்டு சேவிக்க வேணடி அதே கோலத்தில் எழுந்தருளி இருக்கின்றார் போலும்.

இவ்வெம்பெருமானுக்கு வேறு எங்கும் காணப்படாத அமுது படைக்கப்படுகிறது. அதாவது உப்பிலலாத ப்ரஸாதங்கள். ஏனெனில் மார்க்கண்டேய மஹரிஷியின் ப்ரார்த்தனைக்காகவும், பூமாதேவி கல்யாண சமயத்தில் சிறுமியாதலாலும் இந்த வழக்கம் தொன்றுதொட்டு வருவதாக அறிகிறோம். ஆகையால் இவருக்கு "லவண வர்ஜிதர்" என்கிற சிறப்புப் பெயரும் ஏற்பட்டது என்பதாகும்.

இத்திருக்கோயிலில் அனுதினம், வைகானஸ முறைப்படி நித்ய திருவாராதனம் மற்றும் உத்ஸவங்கள் நடைபெறுகின்றன. காலையில் விச்வரூபம் முதல் அர்த்த யாமம் வரை சிறப்பாக நடக்கிறது. ப்ரதி தினம், இங்கு வேதபாராயணங்களும், ஆழ்வார்கள் அருளிய நாலாயிரப்ரபந்தங்களும் சேவிக்கப்படுகின்றன. மேலும் இங்கு கைங்கர்யம் செய்து வந்த அர்ச்சகர்கள், வந்த பக்தர்களுக்கு, ராகத்துடன் அர்ச்சனைகளையும், ஸ்தல புராணங்களை கூறுவது வேறு எங்கும் காணாத அழகு.

இத்தலத்து எம்பெருமான் மிகவும் வரப்ரஸாதி. இது ஒரு ப்ரார்த்தனை ஸ்தலம். இங்கு அனுதினம் ப்ரார்த்தனை கல்யாண உத்ஸவம் நடத்தப்படுகிறது. இத்திருக் கல்யாண உத்ஸவத்தில, பெருமாளும், தாயாரும் உலாவுதல் மாலைமாற்றல் ஆகியவைகள் கண்கொள்ளாத காட்சியாகும்.

ப்ரதி வருடம் பங்குனி மாதம் ஸ்ரவண நக்ஷத்திரம் முதற் கொண்டு ப்ரமமோஸ்ஸவமும், ஐப்பசி மாதம் திருவோண நாளன்று திருக்கல்யாண உத்ஸவமும், மார்கழி மாதத்தில, பகல்பத்து இராபத்து உத்ஸவங்களும், தை மாதம தெப்ப உத்ஸவங்களும் மிக விமரிசையாக நடைபெற்று வருகின்றன. மேலும் ப்ரதிமாதம் ஸ்ரவணத்தன்று கருட சேவையும் ஸ்ரவண தீபமும் புகழ் வாய்ந்தது.

இந்த ஆலயத்தில் ஸ்ரீதேசிகருக்கு மிக முக்யத்வம் அளிக்கிறார்கள். பெருமாள் பிராட்டி கண்டருளும் பற்பல உத்ஸவங்களுக்கு ஸ்ரீதேசிகரும் உடன் எழுந்தருள்வது மரபு.

மற்றும் ஆழ்வார்கள், ஆசாரியார்கள் ஸந்நிதி, ஸ்ரீராமர், ஹனுமார், கண்ணன், கருடன் சன்னதிகள் உள்ளன. வெளிப்ராகாரத்தில் "அஹோராத்ர புஷ்கரணி"க்கு எதிரே தனியாக என்னப்பன், தென்புறத்தில் மணியப்பன் ஸந்நிதியும் விளங்குகின்றன.

இத்திருக்கோயிலின் பெருமாளுக்கு (மூலவர்) வலக்கரத்தில் "மாம் ஏகம் சரணம் வ்ரஜ" என்கிற பகவத் கீதையின் வாசகம் ஒளிக்கற்களால் பதிக்கப்பெற்றுள்ளதைக் காணலாம். இது வைணவத்தின் ப்ரபத்தி அல்லது சரணாகதித் தத்துவத்தை ப்ரதிபலிக்கும் வெளிப்பாடே. அதாவது ஆழ்வார்கள அருளியது போல் "ஒழிவில்லாத காலமெல்லாம் உடனாய் மன்னிவழுவிலா அடிமை செய்வதே" சரணாகதியின் மகிமையாகும். இந்த உபாயத்துக்கு ப்ரபத்தியின் பெருமைக்கும் அத்தாக்ஷியாக விளங்கும் அருள்மிகு "ஒப்பிலியப்பனை" அவன் திருவடிகளில் தலைவணங்கி, அவனது அனுக்கிரகத்துக்கு பாத்திர மாவோமாக என ப்ரார்த்திக்கிறேன்.

பூமிதேவி ஸமேதஸ்ய ஸ்ரீநிவாஸஸ்ய-
பக்திதம்
மங்களாசாஸநமிதம் படதாமாஸ்து-
மங்களம்



---

எப்போதுமே கடவுளை நினைத்தால் தீமைக்கே இடம் இராது. தொல்லைகளும் துயரங்களும் அதிகமாகும்போது நாத்திகன் கூட கடவுளை நினைக்கிறான். மனதைப் பக்குவப்படுத்தி, புலன்களை அடக்கி வாழும் போது உன் உள்ளேயே நீ கடவுளைக் காணலாம்.

● ● ●

மனிதன் குறை உடையவன் மட்டுமல்ல. குறை காண்பவனும் கூட! பிறர் குறையைக் காண்பவன் அரை மனிதன். ஆனால் தன் குறையைக் காண்பவனே முழுமனிதன் ஆவான்.

---

# செய்திச் சுருக்கம்

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் மக்கள் தொடர்பு அலுவலராக பணிபுரிந்து வந்த டாக்டர். ராவுல சூர்யநாராயண மூர்த்தி அவர்கள் 31-12-93 அன்றுஅப்பதவியிலிருந்து ஓய்வு பெற்றார்.

* * *

இதுவரை தி.தி. தேவஸ்தானத்தின் கண்காணிப்புப் பொறியாளராக பணிபுரிந்து வந்த திரு. வி. ஆஞ்சநேயலு நாயுடு அவர்கள் தற்போது தலைமைப் பொறியாளராக பதவி உயர்வு பெற்றுள்ளார்.

* * *

அரபு நாட்டில் குடியிருக்கும் இந்தியரான திரு. எஸ்.பி. நாயர் அவர்கள், தன் பேரனான கௌதம் சுனில் பிறந்தநாளை ஒட்டி, ரூ.39.8 இலட்சம் மதிப்புள்ள தங்கவாள் ஒன்றினை 5-1-94 அன்று திருமலைக்கோயிலுக்கு அன்பளிப்பாக அளித்துள்ளார். இத்தங்கவாள் 36.7 கேரட் வைரக் கற்கள், 52.7 கேரட் கெம்புக்கற்கள், 81.8 கேரட் பச்சைக் கற்கள் கொண்டு 22 கேரட் தங்கத்தால் செய்யப்பட்டுள்ளது. மூன்று அடி நீளம் கொண்ட இவ்வாள் 2421 கிராம் எடை கொண்டது. இவ்வாள் ஒவ்வொரு வியாழன் அன்றும் மூலவரின் இடையை அலங்கரிக்கும்.

* * *

சென்னை மைலாப்பூர் பகுதியைச் சார்ந்த தவத்திரு. ஹரிதாஸ்கிரி சுவாமிஜி அவர்கள் ரூ. 29 இலட்சம் பெறுமான தங்க மாலை ஒன்றினைத் திருமலைக்கோயிலுக்கு நன்கொடையாக 6-1-93 அன்று அளித்துள்ளார். இத்தங்க மாலையானது 36 உயர்தரமான சாலிக்கிராமக் கற்களைக் கொண்டது. சுவாமிஜி அவர்கள் ஏற்கெனவே, திருவேங்கடவன் கோயிலுக்கென ரூ. 58,000 பெறுமான ஸக்ஷ்மி ஹாரம் ஒன்றினையும், திருப்பாவாடை சேவையின் போது பயன்படும்படியான ஒரு வெள்ளித் திருச்சியினை (வாகன தோரணம்)யும் வழங்கியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

* * *

கடந்த 5-1-94 அன்றுதிருமலைக்கோயில் உண்டியில், பக்தர் ஒருவர் ரூ.500 நோட்டுக் கற்றைகள் கொண்ட ரூ. 11.5 இலட்சத்தினைத் தன் தனிப்பட்ட காணிக்கையாகச் செலுத்தியுள்ளார்.

* * *

சுமார் ஒரு இலட்சம் யாத்திரிகள் 1-1-94 அன்று திருமலைக்கு வருகைபுரிந்து ஏழுமலையானைத் தரிசித்தனர். அன்று உண்டி மூலமாக கோயில் வருமானம் ரூ. 29 இலட்சமாகும். கடந்த ஆண்டு வருமானம் ரூ. 21 இலட்சமாகும்.

* * *

திருமலைக்கோயில் வளாகத்திலுள்ள, கோயில் அபிஷேக நிகழ்ச்சிகளுக்காகப் பயன்படுத்தப்படும் நீரினை வழங்கிடும் 'பங்காரு பாவி' எனும் தங்கக் கிணற்றினை சுத்தம் செய்யும் பணிக்காக ரூ. 60,000 ஒதுக்கப்பட்டுள்ளது.

* * *

ஒவ்வொரு ஆண்டும் பிப்ரவரி மாதத்தில் தி.தி. தேவஸ்தானம் சார்பில் திருப்பதியில் இலவச கண் அறுவை சிகிச்சை முகாம் ஒன்று மூன்று நாட்களுக்கு நடைபெறும். இவ்வகையில் இவ்வாண்டு முகாமிற்காக ரூ. 11 இலட்சம் வழங்கப்பட்டுள்ளது.

* * *

சிருங்கேரி (கர்நாடக மாநிலம்), ஆந்திரமாநிலத்தில் நெலகொண்டபல்லி, கோடூரு, முக்கவாரிபல்லி, நாராயணகேட்டு, ரேப்பல்லி அருகே நகரம் ஆகிய ஆறு இடங்களில் தி. தி. தேவஸ்தான திருமண மண்டபங்கள் கட்டப்படும்.

* * *

திருமலையில் பணிபுரியும் தி.தி. தேவஸ்தான கீழ்நிலை எழுத்தரான திரு. பாலாஜி அவர்கள் திருப்பதி அலிபிரியிலிருந்து திருமலைக் கோயில்வரை உருண்டு வந்தே (அங்கப்பிரதட்சணம்) தன் நேர்த்திக்கடனை முடித்தார். இதற்கு அவர் எடுத்துக்கொண்ட நேரம் 13 மணி நேரங்களாகும்.

* * *



## புதிய மக்கள்தொடர்பு அலுவலர்

ஆந்திர மாநில அரசு அறநிலையத்துறையிலிருந்து உதவி ஆணையர் பதவி உயர்வு பெற்று, 31-12-93 அன்று தி.தி. தேவஸ்தானத்தில், திரு. டி சிவாஜி அவர்கள் உதவி செயலாட்சித் தலைவர் பதவிக்கு நிகரான, மக்கள்தொடர்பு அலுவலராக (பொறுப்பு) பதவி ஏற்றுள்ளார்.

Edited and published on behalf of T.T. Devasthanams by K. Subba Rao, M.A., and Printed at T.T.D. Press
by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

